REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 6 பக்கம் விலை 35 காசு










மலர் 4 சென்னை 29—9—1980 திங்கள் —:(*):— வெளியூர் 30—9—1980 செவ்வாய் இதழ் 321




## பண்பாளனை வாழ்த்துவோம்

பேரன்புடையீர்,

தர்மத்தின் தலைமகன் தப்பி விட்டார்! மக்கள் உயிரைத் தன் உயிரெனக் கருதிய உத்தமத் தலைவன் உயிர் காப்பாற்றப்பட்டுவிட்டது! சத்தியத் தாயின் மணி வயிறு ஈன்றெடுத்த ஏந்தல், பேரறிஞர் அண்ணா மடியில் வந்து வீழ்ந்த கனி, அண்ணனின் இதயத்தில் புகுந்த கனி, பிறர் பசியைத் தன் பசியெனக் கருதும் அன்னதாதா, வாரித்தந்து பிறர் துன்பத்தைத் துடைக்கும் பாரிவள்ளல், ஏழைகள் தங்கள் துயர் துடைக்க அண்ணனுக்கு அடுத்தாற்போல் கண்டெடுத்த வைரமணி, திக்கற்றவர்களுக்கு வழிகாட்டி வாழவைக்கும் நிழற்குடை, கண்ணியத்தின் இருப்பிடம், கருணையின் பிறப்பிடம், அன்பின் அடையாளம், பண்பின் இலக்கணம், வந்தாருக்கு விருந்துபடைப்பான், பார்ப்போருக்கு விருந்தாவான், தூற்றித் திரிந்தோராயினும் திருந்தி வந்தால் ஏற்றி வைத்துப் பெருமை கொள்ளும் பெருந்தகையாளன், கலைகளிலே வல்லவன், பொன்நிற மேனியோன், கண்நிறைந்த கட்டுடல் கொண்டோன், அன்றலர்ந்த தாமரை போல் என்றும்- இல்லை- எப்போதும் மலர்ந்திருக்கும் முகங்கொண்டத் தூயவன், கொடியவர்கள் வைத்த வெடிகுண்டினின்றும் உயிர் தப்பினார்! அவர் உயிர் மட்டுமா இல்லை... இல்லவே இல்லை இலட்சக்கணக்கானோர் உயிர்கள் தப்பின!

என்ன துணிச்சல் என்று பாராட்டத் தோன்றவில்லை. மக்கள் உயிரினும் தன் உயிர் மேலல்ல என்று கருதும் குணம் நினைக்கும்போது வியக்காதிருக்க முடியவில்லை!

"என்னுயிரைப் பறிக்க வைத்த வெடிகுண்டுகளிலிருந்து நான் தப்பினால் போதுமா? எதுமறியாது பயணம் செய்யும் பொதுமக்கள் உயிர் என்ன ஆவது? வாழ்ந்தால் அவர்களோடு வாழ்கிறேன். செத்தால் அவர்களோடு சாகிறேன்"— இது முரட்டு தைரியமல்ல, வரட்டுப்பிடிவாதமும் அல்ல! தர்மசிந்தனையுள்ள மக்கள் தலைவன் செய்ய வேண்டிய ஓர் காரியம்! அந்தத் துணிச்சலைப்பாராட்டத் தேடுகிறேன் வார்த்தைகளை...

(2-ம் பக்கம் பார்க்க)

மீட்லண்ட் பின்புறம்

## அமைச்சர் கே. ஏ. கே. பேசுகிறார்

சென்னை, செப். 28- சேப்பாக்கம் தொகுதி ஜானிபாட்சா தெருவில் (மிட்லண்ட் தியேட்டர் பின்புறம்) 30-9-80 செவ்வாய் மாலை 7 மணிக்கு கழகப் பொதுக்கூட்டம் நடைபெறுகிறது.

அமைச்சர் கே. ஏ. கே. வலம்புரி ஜான், திருப்பத்தூர் ராமமூர்த்தி, நிலவழகன், வி. ராஜ்குமார், எஸ். வி. மாரிமுத்து, கண்ணம்மாள் ஆறுமுகம், கோடீஸ்வரன், இரா. சின்னப்பன் ஆகியோர் பேசுவார்கள்.

காலை 10 மணிக்கு வட்டத்தில் இரா. சின்னப்பன் தலைமையில் தொகுதி அமைப்பாளர் வி. ராஜ்குமார்கழகக்கொடியேற்றி வைப்பார்.

## பாலுமகேந்திரா குறித்து தொடர்ந்து விசாரணை

சென்னை, செப். 29 நடிகை ஷோபா மரணம் பற்றி டைரக்டர் பாலுமகேந்திராவிடம் போலீசார் தொடர்ந்து விசாரணை நடத்தி வருகிறார்கள். பாலுமகேந்திரா பற்றி ஆதியோடு அந்தமாக விசாரணை நடக்கிறது.

அவரது தனிப்பட்ட வாழ்க்கை தொழில் முறை போன்ற எல்லா பிரச்சினைகள் குறித்தும் வழக்கு தொடர்பாக விசாரிக்கப் படுவதாகவும் 2 நாட்களில் முடிவுதெரியும என்றும உயர் போலீஸ் அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

### ஏற்கனவே 'எமனை'ச் சந்தித்தவன் நான்

## மக்கள் சேவைக்காக

# உயிரைபணயம் வைக்க தயார்

## வெடிகுண்டு சம்பவத்தைக்காட்டி புரட்சித்தலைவர் உணர்ச்சிமுழக்கம்

தர்மபுரி, செப். 29-வெடிகுண்டு மிரட்டல்களுக்கு அஞ்சும் கோழையல்ல நான். மக்களுக்காக நான் உயிர் விடத் தயாராகவே இருக்கிறேன் என்று முதல்வர் புரட்சித்தலைவர் வீரமுழக்கமிட்டார்.

என் உயிரைப் பணயம் வைத்தாவது வன்முறையை ஒழிப்பேன். மக்களுக்குச் சேவை செய்வேன் என்றும் புரட்சித்தலைவர் கூறினார்.



தர்மபுரி மாவட்ட சுற்றுப் பயணத்துக்காகமுதல்வர் புரட்சித்தலைவர் சென்னையிலிருந்து ரயிலில் வந்த போது சோளிங்கர்-மகேந்திரவாடி ஆகிய ஊர்களுக்கிடையே ரெயில் தண்டவாளத்தில் 8 வெடிகுண்டுகள் கண்டெடுக்கப் பட்டன அல்லவா?

முதல்வர் புரட்சித்தலைவர் சென்றரயிலைக்கவிழ்க்க நடந்த இந்த பயங்கர சதிச்செயல் குறித்து போலீசார் தீவிர புலன் விசாரணை நடத்துகிறார்கள்.

குண்டுகள் கண்டெடுக்கப் பட்டபின் ரயிலில் செல்லாமல் காரில் சென்றுவிடலாம் என்று முதல்வரிடம் காவல் துறையினரும் மற்றவர்களும கூறினார்கள்.

ஆனால் புரட்சித்தலைவர் அதை மறுத்து மக்கள் செல்லும் ரயிலில் நானும் செல்வேன் அவர்களுக்கு ஏற்படும் கதி எனக்கும் ஏற்படட்டும் தனியாகப் போகவிரும்பவில்லை என்று கூறி மறுத்து மக்களுடன் சேர்ந்து ரயிலில் பயணம் செய்தார்புரட்சித்தலைவர்.

தாம் சென்ற ரயிலை கவிழ்க்க நடந்த இந்த சதி பற்றி தர்மபுரி பஸ்நிலைய திறப்புவிழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

### முதல்வர் பேச்சு

முதல்வர்புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:

நான் தர்மபுரிநிகழ்ச்சிக்கு ரயிலில் வந்து கொண்டிருந்த போது ரயில்தண்டவாளத்தில்வெடிகுண்டுகள் கண்டெடுக்கப் பட்டுள்ளன தாக என்னிடம் தெரிவித்தார்கள். ரயிலில் போக போகவேண்டாம். காரில் செல்லுங்கள் என்று அதிகாரிகள் கூறினார்கள்.

உடனே நான் அவர்களிடம் அந்த ரெயிலில் மேற்கொண்டு புறப்படுகிறதா என்று கேட்டேன்.

அவர்கள் புறப்படுகிறது என்றார்கள்.

அப்படி என்றால் திருவனந்தபுரம் வரை செல்லும் மக்களுக்கு ஏற்படும் ஆபத்து எனக்கும் வரட்டும். அதே ரயிலில் நானும் செல்கிறேன். கார் மூலம். செல்லவிரும்பவில்லை என்று சொல்லி விட்டேன்.

மக்களுக்காக நான் உயிரைவிடத் தயார். சாவைக் கண்டு நான் பயப்படுபவன் அல்ல. ஏற்கெனவே நான்ஒருதடவை எமனைச் சந்தித்துவிட்டு வந்தவன்.

(பலத்தகைதட்டல்)

மக்களுக்குச் சேவை செய்யும்போது உயிரை விடுவதை பெருமையாக கருதுவேன்.

நக்சல்பாரிகளைப் பற்றி உங்களுக்குத் தெரியும். யாரோ சிலரைக் கொன்று விடுவதால் ஏழைகளின் துன்பங்கள் தீர்ந்துவிடுமா? ஒரு சிலரைக் கொல்வதாலேயே ஏழைகளின் வாழ்வில் மாறறம் ஏற்பட்டு விடுமா?

அவர்களாகவே ஒருசிலருக்குத்தண்டனை கொடுக்க ஆரம்பித்துவிட்டால் நாடு என்ன ஆகும்? சட்டம் ஒழுங்கு கெட்டுப் போய் விடும்.

அநியாயக்காரர்கள் யாராக இருந்தாலும் தண்டிக்கப்பட வேண்டியவர்கள்தான். ஆனால் அவர்களுக்குத் தண்டனை கொடுக்க நக்சல்பாரிகளுக்கு உரிமைஇல்லை.

என் உயிரைப் பணயம் வைத்தாவது நக்சல்பாரி

(2-ம் பக்கம் பார்க்க)

கழகதோழர்வீட்டைத்தாக்கிய

## தி. மு. க. வினர் 3பேர்கைது

சென்னை, செப்29. கோடம்பாக்கம் புதூரைச் சேர்ந்த கழகதோழர் செல்வமணியை தேர்தல் சமயத்தில் உதயசூரியன், மணி விக்கிரமன் ஆகிய தி.மு.க வினர் தாக்கி கையை வெட்டிவிட்டனர். கடந்த 26-ந் தேதி இரவு 12 மணிக்கு மேற்படியாளர்கள் மீண்டும் செல்வமணி வீட்டை தாக்கினர் இது குறித்து அசோக் நகர் காவல் நிலையத்தில் புகார் செய்யப்பட்டு 3 பேர் கைது செய்யப்பட்டனர்.

## எம்.ஜி.ஆர். இளைஞர் மன்ற கூட்டம்

சாத்தூர், செப், 29- சாத்தூர் 6வது வட்ட எம்.ஜி.ஆர் இளைஞர்மன்ற பொதுக் கூட்டம் எம். முனியசாமி தலைமையில் கூடியது. இ. பன்னீர்செல்வம், சவுந்தரபாண்டியன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

(3-ம் பத்தி தொடர்ச்சி)

குண்டு வீச்சு நடந்துள்ளதால், ஆங்காங்கே எண்ணை வயல்களும், எண்ணை சேமிப்பு இடங்களும் தீப்பிடித்து எரிகின்றன.

எண்ணை வயல்கள் எரிவதால் எழும் புகை மண்டலத்தில் பல நகரங்கள் மறைந்து கிடக்கிறது.

இந்த 7 நாள் யுத்தத்தில்இருதரப்பிலும்சேர்ந்து 15 ஆயிரம் பேருக்குமேல் இறந்திருக்கக்கூடும் எனக் கூறப்படுகிறது.

ஈரான் தலைநகரான டெஹ்ரான் நகரில் நேற்று விமானத்தாக்குதலுக்கான எச்சரிக்கை பலமுறை ஒலித்தது.

## ஈராக்-ஈரான் யுத்த களத்தில்

★ 3 லட்சம் ராணுவ வீரர்கள்

★ 3200 ராணுவ டாங்குகள்

★ 800 போர் விமானங்கள்

# இறுதிகட்ட யுத்தம்

### ஈரான் நகரில் பறக்கும் ஈராக் நாட்டுக் கொடி

லண்டன், செப். 29- ஈரான்-ஈராக் நாடுகளுக்கு இடையேயான யுத்தத்தின் 7-வது நாளான நேற்று, ஈரான் முக்கிய நகர் ஒன்றை இழந்தது. ஈரானின் முக்கிய ராணுவ தளபதி ஒருவரை ஈராக் நாடு கைது செய்துள்ளது.

ஈராக்-ஈரான் யுத்த களத்தில் இரு நாடுகளையும் சேர்ந்த 3 லட்சம் ராணுவ வீரர்கள், 3 ஆயிரத்து 200 டாங்குகள், 800 போர் விமானங்கள் ஈடுபடுத்தப்பட்டுள்ளன.

ஈரான்-ஈராக் நாடுகளுக்கு இடையே கடந்த 7 நாட்களாக நடந்து வரும யுத்தத்தின் விளைவாக, ஈராக்-ஈரான் நாடுகளின் பலபகுதிகள் தீப்பிடித்து எரிகின்றன.

இரு நாடுகளையும் சேர்ந்த 3 லட்சத்து50ஆயிரம் ரராணுவ வீரர்கள் 3 ஆயிரத்து 200 ராணுவ டாங்குகள், 800 போர் விமானங்கள் இந்தயுத்தத்தில் ஈடுபடுத்தப்பட்டுள்ளன.

நேற்றைய யுத்தத்தில், ஈரான்நாடு, கிலான்கிராப் என்ற நகரை இழந்தது.

எண்ணை சப்ளை செய்யும் முக்கிய நகரமான கிலரன் கிராபைப் பிடித்த ஈராக் ராணுவம், அங்கு ஈராக் கொடியைப் பறக்கவிட்டது.

தெற்கு ஈரானைச்சேர்ந்த தேஸ்புல் என்ற நகரின் பெரும் பகுதியை ஈராக் ராணுவம் பிடித்துக் கொண்டுவிட்டது.

ஆனால் ஈரான் இதனை மறுத்துள்ளது- கிலான் கிரப் நகரை நோக்கி வந்த ஈராக் படைகளை ஈரான் படைகள் விரட்டி அடித்ததாக ஈரான் வானொலி அறிவித்தது.

### ஆஸ்வாஸ் நகரம் யார்வசம் உள்ளது?

சுமார் 4லட்சம் மக்கள் வசிக்கும் ஈரானின் ஆஸ்வாஸ்நகரை ஈராக் பிடித்து விட்டதாக அறிவித்துள்ளது.

இரு நாடுகளைச் சேர்ந்த பலநகரங்கள் மீதும், எண்ணை வயல்கள் மீதும்

(8 ம் பத்தி பார்க்க)

### ஜியா சமரச முயற்சி

சமரச முயற்சியில் ஈடுபட டெஹ்ரான் வந்த பாகிஸ்தான் ஜனாதிபதி ஜியா-உல்-ஹக், ஈரான் நாட்டு தலைவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்தினார்.

ஈராக் நாட்டுடன் எந்த வித சமரசத்திற்கும் தயாராக இல்லைஎனஈரான்நாட்டுத்தலைவர்கள் ஜியாவிடம் கூறியதாக தெரிகிறது.

பிறகு ஜியா ஈராக் நாட்டுத் தலைநகரான பாக்தாத்திற்கு புறப்பட்டுச் சென்றார்.

யுத்தகளத்தில் இருந்து கடைசியாக கிடைத்த தகவல்படி. இருநாடுகளும் பயங்கர யுத்தத்தில் ஈடுபட்டுள்ளதாக கூறப்படுகிறது.

புலவர் அறிவுடைநம்பி தகவல்

# உலகத்தமிழ் மாநாட்டை புறக்கணித்து! சிங்கப்பூர் ஓட கருணாநிதி திட்டம்

**பெங்களூர், செப். 29-மதுரையில் உலகத் தமிழர் மாநாடு நடக்கும்போது அதில் பங்குபெறக்கூடாது என்று கருதும் கருணாநிதி அந்தச்சமயத்தில் சிங்கப்பூர் போய்விடத் திட்டமிட்டு இருக்கிறார் என்று புலவர் அறிவுடைநம்பி கூறினார்.**

பேரறிஞர் அண்ணா அவர்களின் 72வது பிறந்தநாள் மங்கல விழாவை ஒட்டி பெங்களூர் மாநகரில் புலவர் அறிவுடைநம்பி 72 இடங்களில் கொடியேற்றி வைத்தார்.

மாலையில் பெங்களூர் காந்தி நகர் தொகுதி சிராமபுரத்தில்- மாபெரும் பொதுக்கூட்டம் நடந்தது. அதில் மாநில அமைப்பாளர்- சுந்தரம்- கருவூலக் காப்பாளர்- தாமரைச் செல்வன், பெரியவர் பதி ஆகியோர் பேசியபின் புலவர் அறிவுடைநம்பி உரையாற்றினார்.

மறுநாள் 16-9-80 பத்ராவதி சிவமுகாவில் நடந்த நிகழ்ச்சிகளில்பங்குகொண்டனர். புலவர் அறிவுடைநம்பியும் மாநில அமைப்பாளர்சுந்தரமும்.

## அடிக்கல் நாட்டினார்

காலை 11 மணிக்கு சிமோகா நகரில் பைல் கும்மார்தெருவில்நிகழ்ந்தகழக கூட்டத்திற்கு புலவர் அறிவுடைநம்பி அடிக்கல் நாட்டினார். இவ்விழாவில் மாநில அமைப்பாளர் சுந்தரம் சிமோகா நகர்மன்ற உறுப்பினர், எம்.எம். குப்புசாமி அவர்களும் அமைப்பாளர் எம். பி, சம்புத் அவர்களும் கலந்து கொண்டனர்.

நண்பகல் 12 மணிக்கு அண்ணா நினைவுநாளை ஒட்டி ஆயிரம்ஏழைகளுக்கு இனிப்புடன் கூடிய உணவு வழங்கப்பட்டது. இதனை புலவர் அறிவுடைநம்பி தொடங்கி வைத்தார். உணவு வழங்கும் பொறுப்பினை திரு.எம் சீனிவாசன் அவர்கள் ஏற்றார்கள்.

மாலை 6 மணிக்கு அண்ணா பிறந்தநாள் விழா பொதுக்கூட்டம் சிவமுகா கருநாடகசங்கத்தில் நடைபெற்றது. ஆயிரக்கணக்கில் தமிழரும் கன்னடரும் கலந்துகொண்டனர்.

விழாவிற்கு அமைப்பாளர் எம் பி சம்பத் தலைமை ஏற்றார், விழாவில் மாநில அமைப்பாளர் எம். சுந்தரம் துணை அமைப்பாளர், முனியப்பா, எம்.எம், குப்புசாமி எம் சி ப த்ராவதி அமைப்பாளர் கோதண்டபாணி ஆகியோர் பேசிய பின் இறுதியாக புலவர் அறிவுடைநம்பி அவர்கள் உரையாற்றினார்கள்.

அவர் கூறியதாவது:

மாதம் மூன்று முடிந்து சில நாட்களுக்குள் போராட்டமா? 'நினைவுபடுத்துகிறோம்' என் கிற கருணாநிதிக்கு நினைவுபடுத்தினார் புரட்சித்தலைவர்' அரச மரத்தைச் சுற்றினால் மகப்பேறு வாய்க்கும் என நினைப்பில் சுற்றி விட்டு, அடிவயிறு கனக்கவில்லை என்று வருந்தியவள் கதையாக இருக்கிறது கருணாநிதியின் போராட்டம்''

கோபம் வருகின்றது கருணாநிதிக்கு! கோவையில் பேசும்போது ''ஆம் முதல்வரே ஒப்புக்கொண்டு விட்டார். அவர் அரச மரம்தான்.

மரத்திடமிருந்து எதையும் எதிர்பார்ப்பது என் குற்றம்தான், என்கிறார். என் தலைவர்-நாட்டின்முதல்வர்- அரசமரம் தான். வள்ளுவன் காட்டிய'பெருந்தகையான் கையில் உள்ள செல்வமாகிய மருந்து மரம் தான் (மருந்தாகி தப்பா மரத்தற்றால் செல்வம் பெருந்தகையான் கண் படின்- குறள்) புரட்சித் தலைவர்.

அணி தேர், புரவி, ஆட் பெரும்படை. ஆணை கூட்டமும் தங்குமாம் 'அரசமரத்தின் அடியில்- என் தலைவர் கன்னடரும்- களி தெலுங்கரும், கவின் கேரளத்தவரும்- கன்னித் தமிழருமாகிய திராவிட பெருங்குடியினர் தங்கும் அரச மரம் தான்.

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் பாண்டியன் பரிசு காவியம் வரைந்தார்அதில் நாயகன் வேலனை ''செம் மரத்தினின்று வடிக்கப்பட்டத்தேர் போன்றான்'' என்று பாடுவார்.

'அடி பிடித்தவேர் கல்லி நூல் பிடித்து
வாள் பிடித்து அறுத்தெடுத்த செம்மரத்தில்
வான் பிடிக்கச் செப்பனிட்ட தேர் போன்றான்'

என்பார், ஆம் ஆல்போல் தழைத்துள்ளதான அரச மரம் தான் புரட்சித்தலைவர்.

## திசை திருப்பல்

பேரறிஞர் அண்ணா பிறந்த இல்லத்தைக் கச்சிப்பதியில் நினைவாலயமாக்கினார் நம்முதல்வர். ஏழரை ஆண்டுகள் நாட்டை ஆண்ட கருணாநிதி செய்யாத காரியம்- நம் தலைவர் செய்தார்.

விழாவிற்கு அழைப்பு முறைப்படி அனுப்பப்பட்டு அதை ஏற்காமல் தன்னை ஆளாக்கிய அண்ணன் விழாவிற்கு வராமல் மக்களைத் திசை திருப்ப எனை அழைக்காமல் விழாவா? என்கிறார் கருணாநிதி

புதிய செய்திஒன்றுநான் அறிந்தேன் கருணாநிதி ஜன வரியில் சிங்கப்பூர் போகிறாராம் காரணம் என்ன தெரியுமா?

நம் அண்ணன் ஆண்ட பொற்காலத்தில் 'உலகத் தமிழ் இரண்டாவது மாநாடு நடைபெற்றது. இப்போது தண்ணார் தமிழ் அளிக்கும் தன் பாண்டி நாட்டின் தலைநகரில் கூடல் மாநகரில் ஐந்தாவது உலக தமிழ் மாநாடு அண்ணனுக்குப் பின்போந்த சின்னவர் எடுக்கும் செந்தமிழர் திருவிழா.

## தோல்வியின் துடிப்பு

முதல்வராக வருவோம். மாநாடு நடத்துவோம். தங்கத்தேரில் பவனி வரலாம் எனக் கனவு கண்ட கருணாநிதி தோல்வியின் துடிப்பில் துவண்ட அவர் மாநாடு நடக்கும் போது தமிழகத்தில் உறைவதா? சிங்கப்பூர் சென்றுவிடுவோம் என்ற கீழ் நினைப்பால் கடல் கடந்த நாடு போகின்றார் - இது தான் கருணாநிதி.

இங்கிருந்து இன்றமிழ் வளர்ச்சிக்கு ஏற்ற தொண்டு செய்யாது-கடல் கடக்கும் கருணாநிதி-நான் சொல்வது பொய் என்றால் மறுப்புரைக் கட்டுமே பார்ப்போம்!

அண்ணா விழாவிற்கு ''அண்ணாவை முற்றிலும் அறியாதவர்கள் வந்தால் போதும் என்று நினைத்து விட்டார்கள்'' இது கருணாநிதி கூற்று.

அறிஞர் அண்ணாவின் இதயத்தின் கனியாகி இடம்பெற்ற தமிழர்காவல் தெய்வம். தனக்கென வாழாத் தமிழர். ஏழைக் கூன் நிமிர்க்கக் கொடுக்கும் வள்ளல்- புரட்சித்தலைவரா அண்ணாவை அறியாதவர்?

''தம்பிவா! தலைமை ஏற்கவா! உன் ஆணை வழி கட்டுண்டு நடப்போம்வா! என்று அண்ணாவால்அழைக்கப்பட்ட நம்நிதிஅமைச்சர் அண்ணன் நாவலர்-அறிய மாட்டாரா அண்ணாவை?

உய்வகைக் காட்டும் உயர் கழகத்துக்கு புது நெறிக் காட்டிய பொதுச் செயலாளர் அண்ணன் ப. உ. ச. அறியாதவரா அண்ணாவை?

குழம்பி இருக்கும் உள்ளம்!

கனத்திருக்கும் இதயம்!!

தெளிவற்ற சிந்தனை!!

தேய்பிறையான அறிவூக்கம்.

இவற்றால் அரசியல் நடத்தும் கலைஞர் இவ்வாறுதான் பேசுவார்.

இவ்வாறு புலவர் அறிவுடைநம்பி பேசினார்.

---

இ. காங்கிரஸ் அரசை விமர்சிப்பதா?

## ராஜஸ்தான் தினசரிகட்கு விளம்பரம் குறைப்பு

ஜெய்ப்பூர், செப். 29 ராஜஸ்தான் மாநில இந்திரா காங்கிரஸ் ஆட்சியை விமர்சித்து செய்திகள் வெளியிட்டதற்காகஜெய்பூரில்இருந்து வெளிவரும் ராஜஸ்தான் பத்திரிகா, நவஜோதி ஆகிய இந்தி தினசரி பத்திரிகைகட்கு அரசு விளம்பரங்கள் திடீர் என குறைக்கப்பட்டு விட்டன.

இத்தகவலை அப்பத்திரிகைகள் தெரிவித்துள்ளன.

---

(6ம் பத்தி தொடர்ச்சி)

தொடங்கப்பட்ட காரியங்களை இளைஞர்கள் நிறைவேற்ற வேண்டும். அப்போதுதான் சமுதாயத்திற்கு நாம் பெருமைதேடி தரமுடியும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் பேசினார்.

## எம். எம். இஸ்மாயில்

''உயர்ந்த பண்புகள் நிறைந்தபெருமகன், தனது அந்தஸ்து பற்றி கவலைப்படாமல், நிறுவனத்தை வளர்ப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தவர் ராஜா சர் முத்தையா செட்டியார்'' என்று உயர் நீதி மன்ற நீதிபதி எம். எம். இஸ்மாயில் கூறினார்.

## தாமோதரன்

சென்னை பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர்ஜி. ஆர். தாமோதரன்பேசுகையில் கல்வி, மொழி தமிழ் இசை ஆகிய வளர்ச்சிக்காக உழைத்தபெரியவர் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவருக்கு நாம் எல்லோரும கடமைப் பட்டுள்ளோம''என்றார்.

மாலையில் நடந்த விழாவுக்கு குன்றக்குடி அடிகள் தலைமை தாங்கினார். குமரி அனந்தன், கி.வீரமணி, க. அன்பழகன், எழுத்தாளர் சாண்டில்யன் ஆகியோர் பேசினர் பத்மா சுப்ரமணியத்தின் நாட்டிய நிகழ்ச்சி நடந்தது.

---

புரட்சித்தலைவர் வழங்கினார்.

# நலிந்த பிரிவினருக்கு மனைப்பட்டா-நிலபட்டா உதவித் தொகை

**ஓசூர், செப். 29-சமுதாயத்தின் நலிந்த பிரிவினருக்கு வீட்டுமனைப்பட்டாக்களையும், நிலப்பட்டாக்களையும் முதியோருக்கு உதவித் தொகையையும் முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கினார்.**

தருமபுரி மாவட்டம் ஓசூரில் நடந்த அரசு விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார்.

563 பேருக்கு நிலப் பட்டாவும் 4120 பேருக்கு வீட்டு மனைப் பட்டாவும், 200 வயோதிகர்களுக்கு முதியோர்உதவித்தொகையும் 79 குடும்பங்களுக்கு விவசாயக் கருவிகளும் முதல்வர் புரட்சித் தலைவர் வழங்கினார். விழாவுக்கு அமைச்சர் திருநாவுக்கரசு தலைமை வகித்தார்,

பணிக்காலத்தில் மரணமடைந்த அரசு ஊழியர் ஒருவரின் மனைவிக்கு 10 ஆயிரம் ரூபாயை முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கினார். லட்சக் கணக்கான மக்கள் விழாவுக்கு திரண்டு வந்தனர்.

## மழை

பகல் பூராவும் ஓசூரில் மழை பெய்து கொண்டிருந்தது. முதல்வர் புரட்சித் தலைவர் விழாவுக்கு வந்த போது சற்றுநேரம் மழை நின்று ஒத்துழைத்தது.

முதல்வர் புரட்சித்தலைவர் பேசும்போது கூறியதாவது:

நல்ல மழை பெய்து தொல்லை தந்தாலும் விழா நடைபெற ஒத்துழைப்பு தந்திருக்கிறது.

இங்கே 200 பேர் முதியோர் உதவித் தொகை பெற்றிருக்கிறார்கள். இன்னும் உதவிபெற தகுதி உடையவர்கள் இருக்கிறார்கள்அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும்.

நிலப்பட்டா பெறுகிறவர்கள் விற்பதற்கு என்ற எண்ணம் இல்லாமல் அவர்களே வைத்துக்கொள்ள வேண்டும் தனக்குநிலமிருக்கிறது என்ற மகிழ்ச்சி ஏற்படும்.

என்னுடைய தாயார் சொந்தவீட்டில் சாகவேண்டும் என்றார்.

அதுபோல ஒவ்வொருவருக்கும் எண்ணம் ஏற்படவேண்டும். ஆளுக்கொரு சொந்த வீடு, நிலம் இருக்க வேண்டும்.

மனைப்பட்டா வாங்கி இருப்பவர்கள் காய்கறி தோட்டம் போட வேண்டும்.

## பிரதமர் கடிதம்

பிரதமர் இந்திராகாந்தி கடிதம் எழுதியிருக்கிறார். வீட்டுக்கு பின்பு காய்கறி வளர்க்க செடி வளர்க்க வேண்டும் என்று எழுதியிருக்கிறார்,

இங்கே மனைப்பட்டா வாங்கியிருப்பவர்கள் வீட்டிற்கு இரண்டு தென்னைமரம் வைக்க வேண்டும். அப்படி வைத்தால் 9 ஆயிரம் மரங்களாகும் மரங்களுக்கு தண்ணீர் ஊற்றும் பொறுப்பை குழந்தைகளிடம் ஒப்படைத்தால் கூட போதும்.

கேரளத்திலிருந்து இப்போது நாம் தேங்காயை, தேங்காய் எண்ணையை வரவழைக்க வேண்டியிருக்கிறது

நம்முடைய மாநிலத்தின் தேவையை நாமே பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்.

ஒவ்வொருவரும் வீட்டில் வாழை.மா, பலா வளர்க்கவேண்டும்.

பிரதமர் இந்திரா விவரமாக கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார் இந்த கொள்கையை பரப்பும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார்.

## நிலச்சரிவு ஏன்?

நீலகிரியில் யாரோ சிலருடைய நன்மைக்காக மரங்களை வெட்டிய தன் விளைவாக நிலச்சரிவு ஏற்பட்டது. இதைமறந்து விடக்கூடாது.

கண் தெரியாமலிருப்பவர்கள், உடல் ஊனமுற்றவர்களுக்கு வயது வரம்பு இன்றி உதவித் தொகை வழங்கி வருகிறோம்.

தெருவுக்கு 4 பேர் 5 பேர் முயற்சி எடுத்துக் கொண்டு கிராமத்திலிருக்கும் இப்படிப்பட்டவர்களுக்கு உதவி புரிய வேண்டும்.

இப்படிச் செய்வதின் மூலம் கிராமத்தின் வறுமையை போக்க முடியும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

---

## டாக்டர் தம்பையா தங்கப் பதக்கம்

சென்னை, செப். 29- தோல் நோய் பயிற்சி பிரிவில் நடைபெறும் தேர்வுகளில்அதிகமார்க்கு பெறும் டாக்டர்களுக்கு தம்பையா தங்கப் பதக்கம் வழங்கப்படும் என்று அப்பிரிவை சேர்ந்த ஒரு உயர் டாக்டர் தெரிவித்தார்.

தமிழகம் முழுவதும் தோல் நோய் பயிற்சி பிரிவில் பயின்றுவரும்டாக்டர்கள் தங்கள் தேர்வுகளில் அதிக மார்க்கு வாங்கினால் ''தம்பையா தங்கப் பதக்கம்' வழங்கப்படும்,

இந்த பதக்கம் தோல் நோய் பிரிவுப் பயின்று வரும் டாக்டர்களுக்கு மட்டும் கொடுக்கப்படும்,

இப்பதக்கத்தை எந்த முறையில் டாக்டர்களுக்கு வழங்குவதுஎன்பது குறித்து ஒரு ஆலோசனைக் கூட்டம் நாளை 30ந் தேதி (செவ்வாய் கிழமை) சென்னை அரசாங்க ஆஸ்பத்திரியில் மாலை 4 மணிக்கு நடைபெறுகிறது. அக்கூட்டத்தில் தோல்நோய் பிரிவு டாக்டர் ராஜேந்திரன், டாக்டர் பாட்ரிசு மற்றும் பல டாக்டர்கள் கலந்து கொள்கிறார்கள்.

---

## புரட்சித்தலைவர் முழக்கம்

(முதல் பக்க தொடர்ச்சி)

களின் திட்டங்களை முறியடிப்பேன். நாட்டு மக்களுக்கு நல்லவை செய்வேன்.

(புரட்சித்தலைவர் வாழ்க என மக்கள் உணர்ச்சி முழக்கம்)

நக்சல்பாரிகளுடன் நான் பேசத் தயாராக இருக்கிறேன் என்று அழைப்பு விடுத்தேன். ஆனால் ஒரே ஒரு நண்பர்மட்டும் பேசத் தயார் என்று சொல்லி இருந்தார்.

ஆனால் அவர் இதுவரை என்னைச் சந்திக்கவில்லை. அவருக்காக நான் காத்து இருக்கிறேன்.

எந்தநேரத்திலும் நக்சல் பாரிகளைச் சந்தித்துப்பேச நான் தயாராக இருக்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

முதல்வர் மேலும் பேசுகையில் கூறியதாவது :

விவசாய சங்கத் தலைவர் நாராயணசாமி நாயுடு போராட்டங்கள் நடத்தி வருகிறார்.

மின்சாரக்கட்டணத்தை கட்டாதே, கூட்டுறவுக் கடனைக் கட்டாதே என்று அவர் விவசாயிகளிடம் கூறிவருகிறார்.

விவசாயிகள் கடனைத் திருப்பி செலுத்தாததால் மேலும் அவர்களுக்குக் கடன் வழங்க ரிசர்வ் வங்கியிடம் பணம் பெற முடியவில்லை.

இதனால் பாதிக்கப்படுவது ஏழை விவசாயிகள் தான். ஏழை விவசாயிகளுக்குக் கூட்டுறவு கடன் கிடைக்காததால் தனிப் பட்டவர்களிடம் அநியாய வட்டிக்கு கடன் வாங்கி ஏழை விவசாயிகள் துன்பப்படுகிறார்கள்.

எனவே நாராயணசாமி நாயுடுவுக்கு வேண்டுகோளாகவும் எச்சரிக்கையாகவும் கூறிக் கொள்கிறேன்.

''ஏழை விவசாயிகளின் வாழ்வோடு விளையாடாதீர்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

---

# தமிழ் சமுதாயம் வளர சாதனை புரிந்த மேதை ராஜா அண்ணாமலை

அமைச்சர் அரங்கநாயகம் பாராட்டு

**சென்னை, செப். 29- தமிழ் சமுதாயம் வளர பாடுபட்ட மேதை ராஜா அண்ணாமலை செட்டியார் என்று அமைச்சர் அரங்கநாயகம் பாராட்டினார்.**

ராஜசர் அண்ணாமலை செட்டியார் நூற்றாண்டு விழா அண்ணாசாலையில்உள்ள ராணிசீதை மண்டபத்தில் நடைபெறுகிறது விழாவை அமைச்சர் அரங்கநாயகம் தொடங்கி வை[illegible] பேசினார். அனைவரையும் எம். ஏ. எம். ராமசாமி வரவேற்றுப்பேசினார்.

சென்னைப் பல்கலைக்கழக துணைவேந்தர் டாக்டர் ஜி. ஆர். தாமோதரன் அழகுசுந்தரம் செட்டியார், டாக்டர் எஸ். மகராஜன் ஆகியோர் பேசினார்கள்.

அமைச்சர் அரங்கநாயகம் பேசுகையில் கூறியதாவது:

ராஜாசர் அண்ணாமலை செட்டியார் தனது செல்வத்தின் ஒரு பகுதியைச் செலவு செய்து சிதம்பரத்திற்கு அருகே மிகப் பெரிய கல்வி நிறுவனத்தை அமைத்தார் அந்த நிறுவனம் சமீபத்தில் பொன்விழாவைக் கொண்டாடியிருக்கிறது.

அந்தகல்விநிறுவனத்தின் மூலம் பட்டம், பதவி பெற்றவர்கள் ஆயிரமாயிரம் பேர் இருக்கின்றனர்.

அந்தப் பெரியவரின் நூற்றாண்டு விழாவில் கலந்து கொண்டு அவருக்கு தங்கள் நன்றியைக் காட்டும் எண்ணம் பெரும் பகுதியினருக்கு இல்லை என்பதற்காக நான் யாரையும் குற்றஞ்சாட்டவில்லை.

இதுதான் தமிழ்நாடு. தமிழ் நாட்டின் நிலை இப்படித்தான் இருக்கிறது இது தமிழகத்தின் முன்னேற்றத்திற்கு தடையாக உள்ளது.

யார்நல்லது செய்தார்கள் என்பதை புரிந்துகொள்ளாதவர்களாக விவரம் தெரியாதவர்களாக நாம் இருக்கிறோம்.

இப்படி இருந்தால் மேலும் நல்வாய்ப்பு பெறமுடியாது.

ஆங்கிலேயர்கள் ஆண்ட நேரத்தில் தமிழ்நாட்டு மக்கள் அடிமைக்கல்வி பெறக் கூடாது சுதந்திரக் கல்வி பெற வேண்டும். என்ற எண்ணத்தில் செயல்பட்டவர் ராஜாசர்அண்ணாமலை செட்டியார்.

தமிழ் மூலம் அறிவு போதிக்க வேண்டும் என்று பாடுபட்டவர்.

தமிழ் இசைச் சங்கத்தை துவக்கி அதற்கு நல்ல ஊன்று கோலாக பக்கபலமாகஇருந்தவர்' அதற்காக நாம் நன்றி கூற கடமை பட்டுள்ளோம்.

தமிழன் வளர வேண்டும் என்றால் நிச்சயம் அறிவு வளரவேண்டும். பல்கலைக்கழகம் என்பது அறிவு வளரும் இடமாக -நிறுவனமாக நாம் கருதுகிறோம்.

இங்கே விழாவில் கலந்து கொண்டு பேசிய நீதிபதி இஸ்மாயில் பல்வேறு நிலைமைகளைப் பற்றி பேசினார்.

இளைஞர்கள் படிக்க வேண்டும் என்ற நல்ல காரியத்தை செய்தவர் ராஜாசர் அண்ணாமலை செட்டியார் தான் சம்பாதித்த பணத்தைபிறருக்காக பயன்படுத்தினார்.

ஒரு சமுதாய உணர்விற்காகசெயல்பட்டார். அதை நினைத்துப் பார்க்கும் போது இன்றுபடிக்க விரும்புபவர்கள் எந்த வகையில் பயன் பெறுகிறார்கள் என்று நினைத்துப் பார்க்க வேண்டும்.

அந்த பெரியவரின் எண்ணங்களை நினைத்துப் பார்க்க வேண்டும். கல்விக்காக பலகோடி ரூபாய் செலவு செய்கிறோம், பின் தங்கியோருக்கு 50 சதவிகிதம் ஷெட்யூல்டுஜாதியினருக்கு 18 சதவிகிதம் என்று ஒதுக்கி செயல் படுகிறோம்.

வெளியே கல்வி பெற முடியாமல் எத்தனை பேர் இருக்கின்றனர்.

அப்படியிருக்கும் போது கல்வி வசதி கொடுத்து உள்ளே சென்றவர்கள் நாங்கள் படிக்க மாட்டோம் என்று கூறுவது என்ன சாதனை.

நேற்று புத்தகசந்தை ஒன்றை திறந்து வைத்துப் பார்த்தேன். தொழில் நிர்வாகம் என்ற இரண்டைப் பற்றியுமே உள்ளபுத்தகங்கள் அவை. உள்ளே சென்று பார்த்தால் 5 ஆயிரம் 6 ஆயிரத்துக்கு மேல்ஆங்கில புத்தகங்கள் இருந்தன.

அதைப் பார்க்கும்போது தாஜ்மகாலை பார்த்த பிரமிப்பு ஏற்பட்டது.

என்றைக்கு நாம்இப்படி தமிழ் புத்தக சந்தையை வைப்போம். இது நம்வாழ் நாளில் நடக்கக்கூடிய காரியமல்ல. நாமும் மற்றநாடுகளை போல் முன்னேற வேண்டும்.

தமிழ் மூலம் கல்வி புகட்ட வேண்டும் என்றார் அண்ணாமலை செட்டியார். அவரது அந்த முயற்சி பெற்றே ஆகவேண்டும் என்பது தான் எங்கள் நோக்கம்.

பணக்காரராக இருந்தால் கோவில் கட்டும் அந்தக்காலத்தில் மக்களுக்காக கல்வி நிறுவனத்தை ஏற்படுத்தியவர் அண்ணாமலை செட்டியார். இது அவரது கூர்த்த மதியை விளக்கும்.

அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் படிக்கும் ஆராய்ச்சி மாணவர்களில் ஒருவராவது நோபல் பரிசு பெற்றால்தான் அண்ணாமலை செட்டியாரின் கனவு நனவாகும் என்று கூற முடியும். இது விரைவில் நிறைவேற வேண்டும் என்று விரும்புகிறோம்.

தமிழிசைக்காக பாடுபட்டவர். தமிழ் இசை இன்னும் முழுப்பயனை கொடுக்கவில்லை அதன்முழு பயனை உருவாக்கவேண்டும்.

கலையின் திருப்புமுனையாக அவரது தமிழிசைப் பணி இருந்தது. அவரது பணி தொடரப்பட வேண்டும். அவரால்

(4-ம் பத்தி பார்க்க)

---

## ப. உ. ச. கடிதம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கிடைக்கவில்லை!

'தர்மம் கர்ணன் உயிரைக் காத்து நின்றது' என்று பாரதக்கதை சொல்லுகிறது! ஆனால் இன்று கண்ணாரக்காண்கிறோம் மக்கள் தலைவனை, கொடை வள்ளல் கர்ணனின் மாற்றுருவத்தை அவர் செய்த தர்மம் காத்து நிற்பதை!

''இருப்பது ஒரு உயிர்தான், அது போகப் போவதும் ஒருதரந்தான். நான் துணிந்துவிட்டவன்'' என்று முழக்கமிட்டத்தலைவனை இழந்து விட்டோமே என்று ஏங்கிக்கிடந்த நமக்கு இதோ புரட்சித்தலைவர்- அதே துணிவோடு, கடமையுணர்வோடு, பாசப் பிணைப்போடு, காண்கிறோம்!

ஏழைகள் வாழ்வில் விளக்கேற்றத்துடிக்கும் தலைவனைப்பெற்றிருக்கும் நமக்குக் கவலை இல்லை!

நம் கவலைகளை பறிக்கும் பண்பாளனை வாழ்த்துவோம்!

கீழ்ப்பாச்சி கட்டாதகாந்தி! எளிதில் எவரையுங் கவரும் புதிய நேரு! வாழ்க நீ! வாழ்க பல்லாண்டு.

அன்புள்ள

**ப. உ. ச.**

---

தலைமைக் கழக அறிக்கை எண் - 105/80

## நெல்லை மாவட்ட கழகத் தோழர்களுக்கு

கழகச் சட்ட திட்டங்களுக்கும், விதிமுறைகளுக்கும் மாறாக செயல்பட்டு கழக வளர்ச்சிக்கு களங்கம் ஏற்படும் வகையில் நடந்துகொண்ட காரணத்தினால் நெல்லை மாவட்டம், தூத்துக்குடி நகரத்தைச் சேர்ந்த முல்லைவழுதி இன்றுமுதல் கழகத்தின் சாதாரண அடிப்படை உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளில் இருந்தும் தற்காலிகமாக நீக்கிவைக்கப்படுகிறார்.

கழக சார்புமன்றத் தோழர்கள் அவருடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ள வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறோம்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள் ஒப்புதலுடனும், பொதுச் செயலாளர் திருமிகு ப.உ.ச அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. ஹண்டே,
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.க.

சென்னை-14
29-9-80

---

தலைமைக் கழக அறிக்கை எண் 106 -80

## முதல் கட்ட கிளைக் கழகத் தேர்தல்

நெல்லை, முகவை, குமரி, தர்மபுரி. நீலகிரி ஆகிய ஐந்து மாவட்டங்களிலும் கிளைக்கழக அமைப்புகளுக்கான அமைப்புத் தேர்தல் 5-10-80 அன்று நடைபெறும் என்று ஏற்கனவே அறிவிக்கப்பட்டுள்ளது. மேற்படி தேர்தல் பணிகளை கண்காணிப்பதற்கென தேர்தல் நடைபெறவுள்ள மாவட்டங்களுக்கான கண்காணிப்பாளர் குழுவும் அமைக்கப்பட்டு அறிவிக்கப்பட்டுள்ளன.

கிளைக்கழக அமைப்புக்கான தேர்தல் நடைமுறைகளைப் பற்றியும் மற்றுமுள்ள பிரச்சினைகள் குறித்தும் பரிசிலனை செய்து முடிவுகள்எடுக்க கண்காணிப்பாளர் குழு 4-10-80 அன்று தேர்தல் அறிவிக்கப்பட்டுள்ள மாவட்டங்களில் கூடும்.

இந்தக்கூட்டங்களுக்கு ஆலோசனை தெரிவிக்க தலைமைக் கழகப் பிரதிநிதிகளாக கீழ்கண்டவர்கள் கீழே காணப்படும் மாவட்ட வாரியாக பங்கேற்பார்கள்.

1. நெல்லை மாவட்டம் : எம்.எஸ். அப்துல்காதர் பி. எஸ்ஸி.,
2. தர்மபுரி மாவட்டம் : வை. பெருமாள், பி. ஏ.,
3. குமரி மாவட்டம் : இரா.மோகனரங்கம எம்.பி.
4. முகவை மாவட்டம் : ஜேப்பியார் ,எம்.எல்.சி,
5. நீலகிரி மாவட்டம் : கோவைத்தம்பி,எம்.எல்ஏ.

4-10-'80 அன்று கண்காணிப்புக் குழுவினர் எந்த நகரில் எந்த இடத்தில் கூடுவார்கள் என்பதையும், அதற்கான இடம் மற்றும் நேரம் ஆகியவற்றை பற்றியும் விரைவில் அறிவிக்கப்படும்.

ப. உ. ச.
பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.க.

சென்னை-14,
29-9-80

# அறத்தந்தை அண்ணுமலை அரசரின்
# நூற்ருண்டு விழா - சிறப்புமலர்

## பிரதமர் வாழ்த்து

வாணிகத்தையும்கொடையையும்இணைத்து வாழ்வது என்பது வணிக வேந்தர்களின் தொன்று தொட்ட மரபாக இருந்து வருகிறது. பல சமூகநல நிறுவனங்களின் தோற்றத்திற்குக் காரணமாக உள்ளவர்கள் இவ் வள்ளல்களே ஆவார்கள். ராஜா சர் அண்ணுமலை செட்டியார் அவர்களுடைய தொலைநோக்குக்கு அவர் தம் பெயரால் சிதம்பரத்தில் அமைத்துள்ள பல்கலைக் கழகமும், மற்றும் எண்ணற்ற கல்வி, கலாசார நிலையங்களும் சான்ருக திகழ்கின்றன.

சர் அண்ணுமலைச் செட்டியார் அவர்களின் நூற்ருண்டு விழாவாகிய இந்நன்ஞளில் அவர் தமிழக வளர்ச்சிக்கு ஆற்றிய தொண்டினை மனமாரப் பாராட்டுகின்றேன்.

1980. செப்டம்பர் 23.

இந்திராகாந்தி
இந்திய பிரதமர்

## கவர்னர் வாழ்த்து

தமிழக ஆளுநர் மேதகு
பிரபுதாஸ் பட்வாரி
ராஜபவனம்,
10-9-80

டாக்டர் ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் நூருவது பிறந்த தின விழாவில் செப்டம்பர் திங்கள் 30ம் தேதி கலந்து கொள்ளும் வாய்ப்பு கிடைத்தமைக்கு பெரு மகிழ்ச்சி அடைகிறேன். தாம் தேடிய செல்வத்தை தர்ம காரியங்களுக்கு செலவிட்டுதமிழ்நாட்டின்தனிப் பெருமகனுராகத் திகழ்ந்த அன்னுரை நினைவு கூர்தல் பொருட்டு நூற்ருண்டு விழா கொண்டாடுவது சாலப் பொருத்தமானது. அப்பெருந்தகையாளரின் சேவை நமக்கு பசுமையான நினைவுகளை தோற்றுவிப்பது மட்டும் அல்லாது நிகழ்காலத்திலும் அன்னுரை நினைவு கொள்ள வைக்கிறது.

டாக்டர் ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட பாரம்பரியம் அவர்கள்சிறப்புமிக்ககுடும் பத்தாரால் பக்தியுடனும் மிகுந்த அக்கறையுடனும் போற்றி பாதுகாக்கப் பட்டு வருவது பெரு மகிழ்ச்சிக்குரியது.

நூற்ருண்டு விழா சிறப்புற நடைபெற என் மனம் நிறைந்த நல்வாழ்த்துக்கள்,

பிரபுதாஸ் பட்வாரி
தமிழக ஆளுநர்.

## நிதியமைச்சர் வாழ்த்து

டாக்டர்
இரா. நெடுஞ்செழியன்,
எம்.ஏ.டி.லிட்,
நிதி அமைச்சர்.
தலைமைச் செயலகம்,
சென்னை-1
18-9-80.

ஈத்து உவக்கும் இன்பம் அறிந்தோர் ஒரு சிலரே. ஈட்டியசெல்வத்தை,ஊரின் நடுவே உள்ள ஊருணி போல்பல்லோர்க்கும்பயன் படச் செய்யும் உளப்பாங்கும் ஒரு சிலருக்கே உள்ளது. அத்தகைய சீராளர்களில், கொடை வள்ளல்களின் வரிசையில் தலை சிறந்து விளங்குபவர் பெருமைக்குரிய செட்டிநாட்டரசர் அண்ணுமலை அவர்கள்.

எளிய மனிதர்களின் இன்பதுன்பங்களில் தாமும் பங்கேற்பதன் மூலம் சமுதாயத்திற்கு பெரும் பணி ஆற்றியசிறப்புடன்தம்மையும் உயர்த்திக்கொண்ட பெருமகனுர் செட்டிநாட்டரசர் அண்ணுமலை அவர்கள்.

தமிழ்மொழி வளர்ச்சிக்கும் தமிழ் இசை மேம்பாட்டுக்கும் அவர் ஆற்றிய பணிமறக்கற்பாலது.இன்று தமிழ் இசை இந்த அளவு உயர்வு பெற்றிருப்பதற்கு அடித்தளம் அமைத்த சிறப்பினுக்குரியார்அவரே.

நான் பயின்ற அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தினை உருவாக்கிய பெருந்தகையாளர். கல்விப் பணியிலும் தமிழர்கள் முன்னேற்றத்திலும் நாட்டம் கொண்டு வாழ்நாளில் அருந்தொண்டாற்றிய செட்டிநாட்டரசர் அண்ணுமலை அவர்களின் நூற்ருண்டு விழா, இனிதே நடந்தேற என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரா. நெடுஞ்செழியன்
(நிதி அமைச்சர்)

## அமைச்சர் எஸ், டி. எஸ். வாழ்த்து

உலகப் புகழ் பெற்ற வள்ளல்களின் வரிசையில் ஒருவராக விளங்கும் அரசர் அண்ணுமலையார் அவர்களின் நினைவு நாளில் பங்கு பெறும் இந்த வாய்ப்பை நான் எனது பெரும் பேருக கருதுகிறேன். இப்படித்தான் வாழவேண்டும் என்று வாழ்ந்து காட்டிய பெருமக்களின் வரிசையில் இடம் பெறும் அண்ணுமலை அரசரின் கொடைத் தன்மையும் அறிவாற்றலும் நம் எண்ணத்தைக் கவர்ந்து இதயத்தில்இடம் பெற்றுவிட்டன,

இமயம் முதல் குமரி வரை ஆலயங்களையும் அன்ன சத்திரங்களையும் கட்டிப் பார்புகழ வாழ்ந்த அறநெறிச் செல்வர்களின் மரபில் வந்தவர் அண்ணுமலையார்.

தமிழ் இசைக்கு அதற்குரிய இடத்தைப் பெற அண்ணுமலை அரசர் நடத்திய போராட்டத்தையும் அதன் விளைவாகத் தோன்றிய தமிழ் இசைச் சங்கத்தையும் இந்த நாடே போற்றுகிறது.

எஸ். டி. சோமசுந்தரம்

(1-10-79ஆம் தேதியன்று அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் அரசர் அண்ணுமலையார் அவர்கள் பிறந்த நாள் விழாவில்மாண்புமிகு வருவாய்த்துறை அமைச்சர் பேசிய பேச்சின் ஒரு பகுதி)

## பக்தவத்சலம் வாழ்த்து

அண்ணுமலைப் பல்கலைக் கழகமும், தமிழ் இசைச் சங்கமும் செட்டியார்அவர்களின் தலைசிறந்த நினைவுச் சின்னங்களாகும். இவைகள் செட்டியார் அவர்களின் தீர்க்க தரிசனத்தை எடுத்துக் காட்டும். நூற்ருண்டு விழாவின் தக்க சாதனைகளாக பல்கலைக் கழகமும், தமிழ் இசைச் சங்கமும் மேலும் ஆராய்ச்சி நிலையங்களாக விரிவாக்கப்படுவதே நூற்ருண்டு விழா தலை சிறந்த சாதனைகளாக அமைய வேண்டும் என்பதே என் அவா.

திரு பக்தவத்சலம்
முன்னுள் முதல்வர்.

## அறத்தந்தை அண்ணுமலைவள்ளல் வாழ்க்கைச் சுருக்கம்



அண்ணுமலைச் செட்டியார் 1881-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 30-ஆம் நாள் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள கானுடுகாத்தானில் பிறந்தார். வணிகத்திற்குப் புகழ் பெற்றதும், அறச் செயல்களுக்கு இருப்பிடமானதுமான ஒரு சிறப்பு வாய்ந்த நகரத்தார் குடும்பத்தில் சா. ராம. சா. முத்தையா அவர்களின் நான்கு மைந்தர்களில் இளைய மைந்தராக பிறந்தார்.

அண்ணுமலைச் செட்டியார் கானுடுகாத்தானிலும், கரூரிலும் தம் பள்ளிக்கல்வியைக் கற்ருர். இளவயதிலேயே தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடத்தக்கதோர்அறிவைப் பெற்றிருந்தார். தேவாரம், திருவாசகம், ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறள்களையும் ஒப்பிப்பதோடு விளக்கவுரை சொல்லவும் தெரிந்திருந்தார். ஆங்கிலத்தில் ஆழமான புலமை பெற்றிருந்ததோடு, அம்மொழியில் இயல்பாகவும் எழுதவும் பேசவும் திறன் பெற்றிருந்தார்.

இறையுணர்வு, கொடை பண்பு, வாணிகத்தில் ஈடுபாடு ஆகிய பண்புகள் அவர் தம் குடும்பப் பண்புகளாக இருந்து வந்தாலும் அண்ணுமலைச் செட்டியார் தம் மரபினர்க்கும் மேலாக இத்துறைகளில் ஒளிவீசித் திகழ்ந்தார். தம் வாழ்நாளின் தொடக்க காலத்திலேயே அதாவது 1910ஆம் ஆண்டில் அவர் ஐரோப்பாவிற்குச் சென்று முழுமையாக ஓர் ஆண்டு பிரிட்டனில் தங்கினுர்.

அதுபோதுஆக்ஸ்போர்டு கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்களைப் போய்ப் பார்த்து வந்தார். திறந்த கண்களோடு செவிகளோடும் ஐரோப்பாவில் அவர் மேற்கொண்ட பயணம் அவருக்குப் பெரும் அனுபவங்களை வழங்கியது. அவர் பெற்ற அனுபவங்கள் அவர்பொது துறையில் ஈடுபட்ட காலையிற் பெரிதும்கைகொடுத்து உதவின.

அவர் காரைக்குடி ஒன்றியத்தின் தலைவராக விளங்கினுர். அது நகராட்சி நிர்வாகங் குறித்து அவருக்கு நல்லதோர் அறிவையும் அனுபவத்தையும் வழங்கியது எனலாம். தூசு, தும்புகளும் மறைந்தன; தெருக்கள் தூய்மை பெற்றன. மேலும் மேலும் பொதுச் சுகாதார வசதிகள் செய்து தரப்பட்டன. உள்ளூர்ப் பணியிலிருந்து அவர் 1916- ஆம் ஆண்டில் சட்ட மேலவைப் பணியாற்றச் சென்ருர். அப்பணியினை மூன்ருண்டுகள் ஆற்றினுர். 1920-ஆம் ஆண்டில் சென்னைமாநிலத்திற்கு ஒதுக்கப்பட்டமாநிலங்களவை(Councilof States) யின் நான்கு இடங்களில் ஓர் இடத்திற்குத் தேர்ந்து எடுக்கப்பட்டார். தொடர்ந்து மூன்று தடவைகள் மறுபடியும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவ்வாறு அவர் 1920-ஆம் ஆண்டு தொடங்கி 1935ம் ஆண்டு வரை தொடர்ந்து பதினைந்து ஆண்டுகள் மாநிலங்களவையின் உறுப்பினராயிருந்தார்.

அண்ணுமலைச் செட்டியார் இயல்பிலேயே பொருளாதாரத் துறையில் ஈடுபாடு கொண்டிருந்தார். இந்தியன் வங்கியைத் தோற்றுவித்த நிறுவனர் உறுப்பினர் என்னும் நிலையில் அவர் விளங்கியவர் ஆவார்கள். அவர் அவ்வங்கியின் இயக்குநர்களில் ஒருவராக இருந்தார். வங்கித்துறையில் அவர்பெற்றிருந்தபேரறிவு, 1921-ஆம் ஆண்டில் அவரை இம்பீரியல் வங்கியின் ஆளுநராக நியமனம் பெறவைத்தது. ஆண்டுதோறும் இவர் தொடர்ந்து நான்கு ஆண்டுகள் அப்பதவியில் நியமிக்கப் பெற்ருர். இதன் பின்னர் இவர் இம்பீரியல் வங்கியின் சென்னைக் கிளையின் இயக்குநர் குழுவில் ஒருவராக பணியாற்றினுர்.

அவர் தம் கொடையுள்ளம் அவருடன் எந்நாளும் இருந்தே வந்தது. வழங்குவது என்பது இயல்பாகவும், அதிலும் நல்ல பணிகளுக்கு தருவதென்பது அவர் தம் தனி இயல்பாகவும் துலங்கியது. மகளிர் குழந்தை நல் மருத்துவமனையொன்றினைக் கானுடுகாத்தானில் அவர் கட்டிக் கொடையாக வழங்கினுர். கல்வி நிறுவனங்களுக்குத் தாராளமாக நன்கொடைகள் வழங்கினுர். 1924ஆம் ஆண்டில் சென்னையில் ஒரு மகளிர் கிளப் அமைய வேண்டும் என்பதற்காக இரண்டு லட்ச ரூபாய் நன்கொடை வழங்கினுர். அவர் நன்கொடையால் எழுந்த 'வெலிங்டன்' என்னும் மகளிர் கிளப் சமூக நற்செயல்களுக்கும் புகழ்வாய்ந்த நிலையமாக விளங்கி வருகிறது. கல்வி மருத்துவம் உதவி, தெய்வத்தொடர்பான அறச்

(2-ம் பக்கம் பார்க்க)



## புரட்சித்தலைவர் வாழ்த்து

இந்த செப்டம்பர் மாதம் மிகவும் நல்ல மாதம். நல்லவர்களின் பிறந்த தினங்கள் இந்த மாதத்தில் வருகிறது. பெரியார் பிறந்தது செப்டம்பர் 17ல், அமரர் அண்ணு பிறந்தது செப்டம்பர் 15-ல் ராஜா அண்ணுமலை செட்டியார் பிறந்தது செப்டம்பர் 30. ஒருவர் அண்ணு, இன்னெருவர் அண்ணுமலை. இடையில் பெரியார். கடவுள் இல்லையென்ருலும் இத்தகைய ஒற்றுமையைக் கண்டு நான் வியக்கிறேன்.

பல்வேறு நாடுகளுக்குச் சென்று அங்குள்ள அரசியல், உழைக்கும் சக்தி, கல்வித்திறன், இவைகளை அறிந்து வந்து தனது ஓயாத உழைப்பு, நியாயமான சேமிப்பு இவைகளால் நல்ல பணிகளைச் செய்து தொண்டாற்றிய பெரியவர் அண்ணுமலைச் செட்டியார் ஆவார்.

பணம் உள்ள அனைவரும் இப்படிப்பட்ட நல்ல காரியங்களைச் செய்துவிடுவார்களா என்ருல் இல்லை.

அண்ணுமலைப் பல்கலைக்கழகம் கல்வியை மட்டும் சொல்லித்தரவில்லை. பல தலைவர்களை குறிப்பாக பல திராவிடரியக்கத் தலைவர்களை உருவாக்கித் தந்திருக்கிறது. நாவலர், அனபழகன், மதியழகன் போன்ற பல பேர் அங்குதான் உருவாகினுர்கள்.

திராவிடரியக்கத்தின் தொடர்ச்சியாக அண்ணு அவர்களால் உருவாக்கப்பட்டு அவரது வழியில் நான் இன்று முதலமைச்சராக இருப்பதற்கும் அண்ணுமலைச் செட்டியார் காரணமாகிருர்,

தமிழ் வளர்ச்சிப் பணியில் நகரத்தாருக்கு முக்கிய பங்கு உண்டு. நகரத்தாரின் பிரதிநிதியாக இருந்து இசைத்தமிழ், தமிழ் இசை என்று மாற்றி அதை ஒரு இயக்கமாகவும் மாற்றி அதற்காக சங்கம் கண்டவர் அண்ணுமலைச் செட்டியார்.

தமிழிசையை வளர்க்க அண்ணுமலை அரசர் பாடுபட்டது என் நினைவுக்கு வருகிறது. சிறு பையனுக இருந்தபோது பத்திரிகையில் இதுபற்றி வந்த விவாதங்களை எண்ணிப்பார்க்கிறேன். எந்தத் தண்டபாணி தேசிகரை ஒதுக்கி வைத்திருந்தார்களோ அந்த தண்டபாணி தேசிகரை அழைத்து பாடவைத்து அவரைப் பெரிய சங்கீத வித்வானுக நாட்டுக்கு அடையாளம் காட்டியவர்.

சிதம்பரம் ஜெயராமன் என்னதான் பாடும் ஆற்றல் பெற்றிருந்தாலும் அவரைப் பாடச் செய்து விளம்பரம் உள்ளவராக மாற்றியவர் அண்ணுமலைச் செட்டியார்தான். அப்படி தமிழ் பாடுகிறவர்களுக்கும் பெருமை ஏற்படக் காரணமாயிருந்தவர் அவர்.

எழுத்தறிவித்தவன் இறைவன் எனப்படும்போது கல்வித் தொண்டும். இன்னும் பல சேவைகளையும் செய்த அண்ணுமலை அரசரை கடவுள் என்றுகூட கூறலாம். அதில் தவறிஒலை.

நல்லவர்கள் கடவுளாக மதிக்கத்தக்கவர்கள், அந்த வகையில் அண்ணுமலைச் செட்டியார் விளங்குகிருர்.

-30-9-78ஆம் ஆண்டு ராணி சீதை மன்றத் திறப்பு விழாவில் தமிழக முதல்வர் மாண்புமிகு புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு.

## தலைமை நீதிபதி வாழ்த்து

மு. மு. இஸ்மாயில்,
உயர் நீதிமன்ற
தலைமை நீதிபதி
ஹைக்கோர்ட் கட்டிடம்,
சென்னை- 600 001
20-9-1980

அன்புடையீர்,

தங்கள் அறக்கட்டளை ராஜா சர் அண்ணாமலை செட்டியார் நூற்றாண்டு விழா நினைவு மலர் வெளியிடுவது அறிய மிக்க மகிழ்ச்சி.

''அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்,
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
அன்னவையாவினும்
புண்ணியங்கோடி ஆங்கோர்
ஏழைக்கு எழுத்தறிவித்தல்''

என்று பாடிய புதுயுகக் கவிஞர்- அடுத்து நூற்றாண்டு விழாக் காணும் மாகவிஞன்- பாரதி வாக்கை- அன்றே செயலில் காட்டிய அண்ணாமலையரசருக்கு நூற்றாண்டு விழா எடுப்பது சாலப் பொருத்தம். அன்னசத்திரம் நடத்தலும், ஆலயம் புதுப்பித்தலும் இயல்பாய்க் கொண்ட மரபில் உதித்த அண்ணாமலை செட்டியார் தமிழகத்தில் பல்கலைக் கழகம் ஒன்றினை நிறுவியதற்காக பாராட்டுக்குரியவர் ஆவார். இவ்வாண்டில் பொன்விழாக் கண்ட பல்கலைக் கழகத்தினை நிறுவியவர்க்கு நூற்றாண்டு விழா மலர் தொடுப்பது பொருத்தமேயாகும். தமிழ்க் கல்வியோடு இசையிலும் தமிழ் உணர்வு வேண்டுமென்று தமிழிசைக்கெனத் தனிச் சங்கமும் கண்டவர் அவர். வள்ளுவன் வகுத்த வழியில் இயற்றலும், ஈட்டலும், காத்தலும் தம் கொள்கை என்று முழங்கிய அவர்தம் புகழ் வளர்க! அன்பன்

மு. மு. இஸ்மாயில்

## எடுத்தவை யாவும் வெற்றி

எடுத்தது மண்ணானாலும்
எழுமலைப் பொன்போ லாகும்
தொடுத்தது நூலா னாலும்
தொடத்தொட இரும்பாய் மாறும்
அடுத்தொரு பேரும் இல்லை
அண்ணாம லைதன் வரவில்
எடுத்தவை யாவும் வெற்றி
இறைவனே அவன்பா லன்றோ.

கவியரசு கண்ணதாசன்
''அரசவைக் கவிஞர்''.

## வாழ்த்துக் குறள் மலர்கள்

1. அகர முதல எழுத்தெல்லாம் அண்ணா மலைமன் முதற்றே அறிவு.
2. பிறவிப் பயனென்கொல் அண்ணா மலையில் அறிவும் பெறுஅர் எனின்
3 அண்ணாமலையென்னும் ஆலயஞ் சேர்ந்தார் புவிமேல் புகழெய்து வார்
4. வேண்டுதல் வேண்டாமையின்றி அணைத்திடும் அண்ணாமலைக்கு நிகர் யார்
5. அறியாமை பொய்ம்மை அணுகிடா அண்ணா மலையார் புகழ் புரிந்தார் மாட்டு.
6. அண்ணாமலைக்கழகம் சேரார்க்(கு) அறிவுப் பெரும்பசி மாற்றலரிது
7. பொறியுழவு பொங்குதமிழ் இன்பம் நிலைக்கும் கலையறிவு மாநகரில் காண்
8. அறமாம் அரசின் அடிபணிந்தார்க் கல்லால் இசைக் கடல் நீந்த லரிது
9. கல்விப்பெருங்கடல் நீந்துவார் நீந்திடார் அண்ணாமலையணுகாதார்
10. ஈட்டுதல் காத்தல் வகுத்தலெனும் முக் குணத்தான் தாளை வணங்கல் தலை.

டாக்டர் ஆறு. அழகப்பன், எம்.ஏ.,எம்.லிட். பி.எச்.டி,
தமிழ் இணைப் பேராசிரியர் அண்ணாமலைப்பல்கலைக்கழகம்

## நீதிபதி கோகுல கிருஷ்ணன் வாழ்த்து

ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தமிழின்பால் மாறாக் காதல் கொண்டவர், தமிழ் இசைக்குப் புத்துயிர் அளித்தவர், சென்னையில் தமிழ் இசைச்சங்கத்தினை நிறுவிச் செந்தமிழ்த் தாய்க்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தவர். ஆகுமோ, முடியுமா என்ற கோழைகளுக்கு உணர்ச்சி ஊட்டி, தமிழில் பாடவிடமாட்டோம் என்ற ஆணவக்காரர்களின் கொட்டத்தை அடக்கி, செந்தமிழ்ச்சுவை இசை மூலம் பரவச்செய்த பெருந்தகை ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்கள் ராஜா சர் அவர்களின் தமிழ் ஆர்வம் மட்டும் நமக்குக் கிடைக்காமல் இருந்திருந்தால், ஏழிசையாய் இசைப்பயனாய் இறைவன் வாழ்ந்த தமிழ் இசையை இவ்வளவு ஏற்றத்தில் நாம் பெற்றிருக்க முடியாது.

நீதிபதி
திரு. பி. ஆர்.
கோகுல கிருஷ்ணன்

## வாழ்க்கை சுருக்கம்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)



செயல்கள் ஆகிய பல துறைகளுக்கு அவர் பொருள்களை வாரி வழங்கினார்.

குறிப்பாக சிதம்பரத்தில் நடராசர் ஆலயத்தினையும், கோவிந்தராசப் பெருமாள் ஆலயத்தினையும் அவர் புதுப்பித்திருந்து திருப்பணியை ஆற்றினார்.

அவருடைய முன்னோர்கள் வழி வழியாக வணங்கி வழிபட்டுவரும் குலதெய்வம் சிதம்பரம் நடராஜர் ஆவார். உண்மையைத் தேடி நின்ற பேரறிவாளர்களும், ஞானிகளும் சிதம்பரத்தையே தேர்ந்தெடுத்துள்ளனர். இத்தகைய சிறப்பிற்குரிய சிதம்பரத்தில் அண்ணாமலைச் செட்டியார் கல்லூரி ஒன்றினை நிறுவ எண்ணினார். 1920- ஆம் ஆண்டில் அவ்வெண்ணம் உறுப்பெறத்தொடங்கியது. 35 லட்சம் செலவில் சமஸ்கிருதம், இசை, கலை, விஞ்ஞானம் கல்லூரிகள் படிப்படியாகத் தோற்றங்கள் கொண்டன. பின்னர் 1929 ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பெற்ற அண்ணாமலை பல்கலைக் கழகத்திற்கு இவை முன்னோடியாக இலங்கின. இருபது லட்ச ரூபாய் மதிப்புடைய கட்டிடங்களையும் அறக்கொடைகளையும் 1929- ஆம் ஆண்டில் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் வழங்கினார்கள். அவர் தம் உள்ளமும்உயிரும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தைப் பற்றியே சுற்றிச் சுழன்றன.

இதற்குமுன்னர் அண்ணாமலைச்செட்டியார் பிரான்சு இந்தோ-சைனாபர்மா விவகாரங்களில் இந்தியர்களுக்கான உரிமைகளை எடுத்துரைத்தார். 1935 ஆம் ஆண்டில் இங்கிலாந்துநாட்டிற்கும் பிறவிடங்களுக்கும் தம் துணைவியார் ராணி சீதை ஆச்சியுடன் சென்று அங்குள்ள பல்கலைக் கழகங்கள் பலவற்றைப் பார்வையிட்டார்கள். அமெரிக்கா, எகிப்து முதலிய நாடுகளுக்கும் சென்று வந்தார்கள்.

அவருடைய சிறப்பிற்குரிய எடுத்துக்காட்டாக இலங்கிய பொதுத்தொண்டினைப் பாராட்டு முகமாக 1924 ஆம் ஆண்டில், அவருக்குப் 'பிரபு' பட்டம் வழங்கப் பெற்றது. பரம்பரையாக வரும் 'ராஜா' பட்டம் 1929ஆம்ஆண்டில்வழங்கப் பெற்றது. 1932ஆம் ஆண்டில் கௌரவ எல்.எல்.டி. டாக்டர் பட்டம்சென்னைப் பல்கலைக் கழகத்தினரால் வழங்கப் பெற்றது. 1947 ஆம் ஆண்டில் அண்ணாமலை பல்கலைக் கழகம் டி.லிட்., பட்டம் வழங்கியது. அவருடைய வாழ்நாள் கோட்பாடு ''ஈட்டுதல் காத்தல், வழங்குதல்'' என்பதாகும்.

சென்னைத் தமிழ் இசைச் சங்க நிறுவனர்-புரவலர் அவராவர். தமிழ் நாடெங்கும் தமிழிசை இயக்கத்தைப் பரப்பியவரும் அவரே. 1948-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 15-ஆம் நாள் ராஜா அவர்களின் வாழ்க்கை முடிவுற்றது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அவருக்காக நிறுவப்பெற்றுள்ள அவருடைய திருவுருவச் சிலையின் கீழ் அமைந்துள்ள தொடர் வருமாறு:- ''சிறந்த எண்ணங்களை எண்ணுக; சிறந்த செயல்களை ஆற்றுக'' இத் தொடர்கள் பெரு வாழ்வு வாழ்ந்த அப் பெருமகனாரின் வாழ்வினையும் பணியினையும் வியக்கத்தகு நிலையில் விளக்கி நிற்கின்றன எனலாம்.

# அறத்தந்தை அண்ணாமலை வள்ளலால் நிறுவப்பட்ட அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வளர்ச்சிக் கட்டங்கள் 1929-1980.

1881 செட்டிநாட்டில் அறத்தந்தை அவதரிப்பு,
1920 ஸ்ரீ மீனாட்சி கல்லூரி சிதம்பரத்தில் துவக்கம்.
1922 பி.ஏ., வகுப்புக்கள் துவக்கம்.
1926 புதுக்கட்டிடம் தொடக்கம். ஹானர்ஸ் வகுப்பு தமிழ், சமஸ்கிருத கல்லூரிகள் ஆரம்பம்.
1927 அறத்தந்தை மூன்று கல்லூரிகளையும் இருபது லட்ச ரூபாயையும் அனைத்துக் கட்டிடத்தையும் நன்கொடையாக அளித்தல்.
1928 உடனுறை பல்கலைக் கழகமாக சட்டசபையில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் உறுப்பினர்களின் மகிழ்ச்சிகளுக்கிடையே அமைதல்.
1929 அண்ணாமலைப் பல்கலைக் கழகம் உதயம். தத்துவம், அரசியல், வரலாறு, ஆங்கிலம், கணிதம், பௌதீகம், இரசாயனம், பொருளாதாரம், இசை முதலிய பிரிவுகள் தொடக்கம். ரைட் ஹானரபிள் வி. எஸ். சீனிவாச சாஸ்திரி, திரு. எஸ். ஈ. ரங்கநாதன் துணை வேந்தர்கள்.
1930 ஆட்சிக்குழு, ஆளவைக்குழு ஆரம்பம்.
1931 தாவர இயல், விலங்கியல் படிப்புகள் துவக்கம்.
1935 ரைட் ஹானரபிள் திரு. வி. எஸ். சீனிவாச சாஸ்திரி துணை வேந்தர்.
1940 இசைக் கல்லூரி தொடக்கம், திரு. கே. வி. ரெட்டி துணைவேந்தர்.
1942 திரு. எம். இரத்தினசாமி, துணைவேந்தர்.
1944 டெக்னாலஜி படிப்பு தொடக்கம்.
1945 'சிவில் இஞ்சினியரிங்' எலக்டிரிக்கல் படிப்புக்கள் துவக்கம்.
1948 அறத்தந்தை அமரர் ஆதல். முத்தையவேள் இணை வேந்தர், டாக்டர் எஸ். மணவாள ராமானுஜம் துணைவேந்தர்.
1949 என்.சி.சி.மக்கட்தொகை ஆய்வுக்கூடம், இசைப் பட்டப் படிப்புகள், தொடக்கம். டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் வருகை.
1951 உழவியல், தமிழ் ஆராய்ச்சித்துறை தொடக்கம் டாக்டர் ஆர். கே. சண்முகம் துணைவேந்தர்.
1953 கல்வித்துறை,ஸ்டரக்சுரல்இஞ்சினியரிங்,புலவியல்' தமிழ்க்கீழ்திசைப்பிரிவு படிப்புக்கள் தொடக்கம் டாக்டர் இராஜேந்திர பிரசாத் வருகை.
1954 சமூக இயல் படிப்பு தொடக்கம், அகில உலக எழுத்தாளர் மாநாடு நடைபெறுதலும், பாரதப் பிரதமர் நேருவின் வருகையும்.
1955 புள்ளியல், மொழியியல், வணிக இயல் படிப்புக்கள் தொடக்கம்.
1955 வெள்ளி விழாக் கொண்டாட்டம். திரு. டி. எம். நாராயணசாமிபிள்ளை துணைவேந்தர் அகில இந்திய கீழ்த்திசை மாநாடு நடைபெறுதல்.
1956 இந்திய தத்துவ மாநாடு நடைபெறுதல்.
1957 கடல்வாழ் உயிர் இனப்படிப்பு துவக்கம். திறந்த வெளி அரங்கம் திறப்பு. உலகச் சரித்திர ஆராய்ச்சியாளர் டாயின்பீயி வருகை.
1958 முத்தையா பாலிடெக்னிக் துவக்கம்.
1959 டாக்டர் சி. வி. ராமன் வருகை, கம்ப ராமாயணச் செம்பதிப்புத் துவக்கம்.
1961 உளவியல் படிப்புத் துவக்கம். திரு. வி. சுப்பிரமணியம் துணைவேந்தர்.
1962 எம். இ. டி. நூலக சான்றிதழ் படிப்புக்கள் துவக்கம். டாக்டர் சி. பி. ராமசாமி அய்யர் துணைவேந்தர்
1964 சிவில் இஞ்சினியரிங் ஆய்வுக்கூடம் திறப்பு ஜெர்மன் மற்றும் இந்தி சான்றிதழ் படிப்பு. பொறியியல், எம். எஸ்.சி. பகுதி நேரப் படிப்புகள் தொடக்கம்.
1965 வேலைவாய்ப்பு அலுவலகத் திறப்பு. ஜெனரல் கரியப்பா வருகை. பிரெஞ்சு மொழி சான்றிதழ் படிப்பு துவக்கம். இசைக் கல்லூரி பகுதிநேரப் படிப்புத் துவக்கம்.
1966 திரு. சந்திரா ரெட்டி துணைவேந்தர். அயல் நாட்டவருக்கு எட்டு வாரங்களில் பேச்சுத் தமிழ் சான்றிதழ்-படிப்பு துவக்கம்.
1970 டாக்டர் எஸ். பி. ஆதிநாராயணன் துணை வேந்தர்.
1972 இந்தி, உருது படிப்புகள் துவக்கம்.
1973 பி. ஏ. பிரிவுகளில் தமிழ் பயிற்றுமொழி
1974 விளையாட்டு பயிற்சி,சுற்றுலா படிப்புத்துவக்கம். இளங்கலைக்கு அறுதிங்கள் தேர்வு அறிமுகம்.
1975 கோடைக்கால எம். டி. வகுப்பு, பி.காம்., பிரிவில் தமிழ்ப் பயிற்சி மொழி துவக்கம்.
1976 கம்ப்யூட்டர் சென்டர். மக்கட்தொகை படிப்பு தொடக்கம். டாக்டர் எஸ். சந்திரசேகர் துணை வேந்தர்.
1977 பகுதிநேர எம், எஸ். சி. (உழவு) புதுத்திட்ட பி. இ., அரிசி ஆலை விரிவுப்பணி- பிரிவுகள் தொடக்கம்.
1978 முதுகலையில் அறுதிங்கள் தேர்வு தொடக்கம். வணிக நிர்வாகம் முதுகலை மக்கள் இயல், சட்டப்படிப்பு தொடக்கம், நடுவர் பி. எஸ்., சோமசுந்தரம் துணைவேந்தர்.
1979 நூலக இயல் படிப்பு தொடக்கம், பி. இடி., பி. காம்., சட்டச் சான்றிதழ் படிப்புகள் அஞ்சல் வழி தொடக்கம். பல்கலைக் கழக பொன்விழாக் கொண்டாட்டம்.
1980 பல் மருத்துவத்துறையில் படிப்புத்தொடக்கம். பல்வேறு படிப்புக்கள் அஞ்சல் வழித் தொடக்கம்.

### இன்றைய வடிவம் (1979-80)

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இன்று
கல்வி நல்கும் துறைகள் 33
ஆசிரியர்கள் 450
மாணவர்கள் 6131
மாணவிகள் 1252
அஞ்சல் வழி மாணவர்கள் 6800
பணியாளர்கள் 560
விடுதி வாழ் மாணவ மாணவிகள் 4623
விடுதிப் பணியாளர்கள் 350
வெளிப்புற மாணவர்கள் 3120
குடியிருப்பு 244
பட்டம் பெற்றவர்கள் டாக்டர் 319
முதுகலை 8822
இளங்கலை 23873
சான்றிதழ் பட்டம் பெற்றவர்கள் 3401
என்ற பெருமைகளைப் பெற்று பீடுநடை போட்டுச் செல்கிறது.

வாழ்க அண்ணாமலை கீர்த்தி!
வளர்க அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

அம்பத்தூர்

## ஐ. டி. ஐ. தேர்தலில் கழகம் வெற்றி

சென்னை, செப். 29- சென்னை அம்பத்தூர் அரசு தொழிற்பயிற்சி நிலையத் தேர்தலில் கழக அணி வெற்றி பெற்றது.

வெற்றி பெற்ற எஸ். பி. ஏ. ராஜாசிங், ஏகநாதன் சண்முகம், செல்வகுமார், வி. சண்முகம் ஆகியோர் சட்டமன்ற உறுப்பினர் ஜே.சி.டி. பிரபாகரனை சந்தித்து மாலை அணிவித்தனர். பின்னர் அண்ணா காமராஜ் சிலைகளுக்குமாலை அணிவித்தனர்,

## சேலம்பிரமுகர் கழகத்தில் இணைந்தார்

சென்னை,செப்.29- சேலம் மாவட்ட சிறு தொழிற்சாலைகள் கிராமத்தொழிற்சாலைகள் சங்கத் தலைவர் கே.பி. சீனிவாசன் பொதுச் செயலாளர் ப.உ.ச. முன்னிலையில் கழகத்தில்இணைந்தார்

அப்போது கண்ணன். ரகுமான்கான், சாக்ரடீஸ், ஜெயராஜ், சொக்கலிங்கம் ராஜா ஆகியோர் உடனிருந்தனர்.

காவல்துறையினரின் நீண்டநாள் கனவை நனவாக்கிய முதல்வர்:

## ஓய்வுபெறும்காவல்துறையினருக்குவீடுகட்ட

## ரூபாய் 1 கோடி மூலதனத்துடன்

# தனி வாரியம்

## கழக அரசு அமைக்கிறது

**சென்னை, செப். 29- ஓய்வு பெறும் காவல்துறையினருக்கு வீடு கட்டித் தர புரட்சித்தலைவரின் கழக அரசு ஒரு கோடி ரூபாய் மூலதனத்துடன் தனி வாரியம் அமைக்கிறது. இதன் மூலம் காவலரின் நீண்டநாள் கோரிக்கை நிறைவேறுகிறது.**

பணிக்காலம் முடிந்து ஓய்வு பெறும் காவல்துறையினர் ஓய்வுக் காலத்தை கழிக்க வீடு கட்டித்தர உதவி செய்ய வேண்டும் எனக்கோரி வந்தனர்.

புரட்சித்தலைவரின் கழக அரசு இக்கோரிக்கையை ஏற்றுக்கொண்டு, ஓய்வு பெறும் காவல்துறையினருக்கு வீடுகட்டித்தர தனி வாரியம் அமைக்க அரசுமுடிவு செய்துள்ளது.

தமிழ்நாடு வீட்டுவசதி வாரியம் என்ற பெயரில் 1கோடி ரூபாய் மூலதனத்துடன் இந்தவாரியம் அமைக்கப்படுகிறது.

இந்த வாரியத்திற்கு தற்போது ஐ. ஜி. ஒருவர் தலைவராக இருப்பார்.

இந்த வாரியத்தின் தலைமையகம் சென்னையில் இருக்கும்.

இந்த வாரியத்தை கழக அரசு அமைத்ததன் மூலம் காவல்துறையினரின் நீண்ட நாள் கோரிக்கை நிறைவேறுகிறது.

## கோடம்பாக்கம்

4-10-80 சனி மாலை 7 மணிக்கு அம்பேத்கார்திடலில் எம். சூரி தலைமையில் பேசுவோர்:

நடிகமணி டி. வி என். திருவை அண்ணாமலை, சங்கரய்யா, கோடம்பாக்கம் குமார், கு. க. செல்வம்., சா. கோவிந்தசாமி, தி. நகர் மூர்த்தி, கலியமூர்த்தி, பி.பி. சாமி, தட்சிணாமூர்த்தி, ராமலிங்கம். ஜோஸ், மோகன்ராஜ், மதிவாணன், ஜெயபாலன், மற்றும் பலர்.

## பொய் செய்திக்கு கண்டனம்

சென்னை, செப். 29- 22-9-80 அன்று மாலை சுதேசமித்திரன் பத்திரிக்கையிலும், 23-9 80 காலை தினகரன் பத்திரிக்கையிலும் கிறிஸ்துவ கல்லூரியில் எம். எஸ். சி. சீட்டு வாங்கி தருவதாக கூறி தாமோதரன் என்ற நபரிடமிருந்து ரூ. 1,100- வாங்கியதாக அ.தி.மு.க. பிரமுகர் என்று கூறப்படும் கணேசன் (வயது 39) என்பவர் கைது செய்யப்பட்டுள்ளதாகவும் அவர் 88 வது வட்டத்தின் அ. தி.மு க. செயலாளர் என்று சுதேசமித்திரன் பத்திரிக்கையில் செய்தி வந்துள்ளது.

எனவே 88வது வட்ட அமைப்பாளராகிய நான் (கோவை கணேசன்) மேற்கூறிய பொய் செய்திக்கு மறுப்பு தெரிவிக்கும் வகையில் கீழ்க்கண்ட தகவலை வெளியிடுகிறேன்.

கைது செய்யப்பட்ட கணேசனுக்கும், எனக்கும் எத்தகைய சம்பந்தமில்லை. பணம் கொடுத்ததாக கூறப்படும் தாமோதரன் என்பவர் யார் என்றே எனக்குத்தெரியாது. கைது செய்யப்பட்டுள்ள கணேசன் 88 வது வட்ட கழக உறுப்பினர் கூடயில்லை. இவருக்கும், கழகத்திற்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. இப்படி இருக்கையில் யாரோ செய்த தவறுக்கு என்னை சம்பந்தப் படுத்திஉள்ளது கண்டனத்துக்குரியது.

ஆகவே மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித்தலைவரின் ஆட்சிக்கும், எனக்கும் களங்கம் கற்பிக்கும் நோக்கோடு உண்மைக்கு மாருன தகவலை மாற்று கட்சியினர் தூண்டுதலின் பேரில் தவருன செய்தியாக வெளியிட்டுள்ள சுதேசமித்திரன், தினகரன் நாளேடுகள் மறுப்பறிக்கை வெளியிடவும் நான் தனியாக கடிதம் எழுதியுள்ளேன்.

இவ்வாறு கோவைகணேசன் தமது அறிக்கையில் கூறியிருக்கிருர்.





போராட்டம், போராட்டம் என்று

## அச்சுறுத்தி அரசியல் நடத்துபவர்கருணாநிதி: கே. ஏ. கே. தாக்கு

**சென்னை, செப். 29- போராட்டம், போராட்டம் என்று அச்சுறுத்தி அரசியல் நடத்துபவர் கருணாநிதி. அவரது அரசியல் புரட்சித் தலைவரிடம் செல்லாது என்று அமைச்சர் கே. ஏ. கே கூறினர்.**

தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணாபிறந்தநாள் விழா பொதுக்கூட்டம் சென்னை 122 வது வட்டம் ஆலயம்மன் கோவில் அருகேயுள்ள குடிசை மாற்றுவாரிய திரு. வி. க. குடியிருப்பு அருகே நடந்தது.

ஆயிரம் விளக்கு தொகுதி அமைப்பாளர் பா. அங்கமுத்து கூட்டத்துக்கு தலைமை வகித்தார். ஆயிரக் கணக்கில் மக்கள் திரண்டிருந்த கூட்டத்தில் அமைச்சர் கே. ஏ. கே. கருத்து விளக்கம் அளித்து எழுச்சியுரை ஆற்றினர்.

பொத்தனூர் மணிமாறன், புரட்சிமணி, சி. வி. அன்புத்தம்பி, தியாகராயநகர் தொகுதி அமைப்பாளர் சா. கோவிந்தசாமி, ஆரோக்கியதாஸ், கே.எஸ் மணி, சரசம்மாள், சரஸ்வதியம்மாள், பெ. சீனிவாசன், மயிலை ராமசாமி, கே. எம். காசிம், ராமமூர்த்தி, பிச்சைக்கண்ணு, நாகராசன், டேவிட், நுங்கை மாறன், ஆண்ட்ரூஸ் துளசி ஆகியோர் பேசினர். மன்னன் நன்றி கூறினர்.

### நிதானம் இழந்த கருணாநிதி

அமைச்சர் கே. ஏ. கே. பேசுகையில் கூறியதாவது:

ஆயிரம் விளக்குத் தொகுதியில் இன்று காலை முதல் மாலைவரை தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா விழாக்கள் நடந்தன. ஒவ்வொரு வட்டத்திற்கும் சென்று கழகக் கொடி யேற்றிவைத்து மனநிறைவு கொள்ளும் வகையில் தந்தைபெரியார் பேரறிஞர் அண்ணாவின் புகழை எல்லோரும் பேசினோம். அதற்குமுத்தாய்ப்பு வைப்பதுபோல இங்கே இந்த கூட்டம் நடக்கிறது.

நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்தவர்களுக்கு பாராட்டுத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதிகாரப் பொறுப்பில் முதல்வராக இருந்த கருணாநிதி ஒரு சமயம் நிதானமிழந்து பேசுகிருர். கருணாநிதி வேலூர் பக்கம் கால் வைக்கக் கூடாது என்று சொல்கிருர்கள்.

போலீசைப் பார்த்து "நான் வேலூர் போய்த்தான் தீருவேன் என்கிருர் கருணாநிதி. மாணவர்கள் உறுதியுடன் இருக்கிருர்கள். உங்களுக்கு பாதுகாப்பு கொடுக்க முடியாது என்று போலீசார் கூறுகின்றனர்.

அவ்வளவுதான் வேலூர் செல்லாமலேயே திரும்பிச் சென்றவர் தான் இந்த கருணாநிதி.

அந்த மாணவர்கள் மீது பொய் வழக்குகள் போட்டார் கருணாநிதி அந்த மாணவர்கள் நிபந்தனை ஜாமீனில் இருந்தனர்.

நான் அந்த மாணவர்களையெல்லாம் சென்று பார்த்தேன். அந்தக் கருணாநிதியை கோழையாக்கியவர் தான் இங்கே பேசிய பொத்தனூர் மணிமாறன். 1961-ம் ஆண்டிலிருந்து அவருடன் தொடர்பு ஏற்பட்டது. புரட்சித் தலைவரின் அன்புத் தம்பியாக செயல்பட்டு வருகிருர்.

முதல்வர் புரட்சித் தலைவரின் பணிகளை சிலரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

"ரயில்பாதையில் குண்டுகள் இருக்கின்றன. நீங்கள் வேறு பாதையில் செல்லுங்கள்" என்று புரட்சித்தலைவரிடம் கூறியபோது அவர் அமைதியாக ஏன் செல்லக் கூடாது. அந்த 5 ஆயிரம் பேருக்கு வரும் சம்பவம் எனக்கு வரட்டும் என்று சொல்லிச் சென்றவர்புரட்சித்தலைவர். கோழையாக திரும்பிவரவில்லை.

ரயில் பாதையில் 8 குண்டுகளை வைத்து தாக்க முயற்சிக்கின்றனர் என்ருல் இது ஒரு நாடா அல்லது காடா?

புரட்சித்தலைவர் இதற்கெல்லாம் அஞ்சுபவர் அல்ல.

நெருக்கு நேர் சுட்டவனையே பார்த்தவர் முதல்வர் புரட்சித்தலைவர்.

### ஆவடி சம்பவம்

அவர் பார்க்காத சம்பவமா? ஆவடியில் கருப்புக் கொடி காட்டுகிறேன் என்று சொல்லி இரும்புத் தடி கொண்டு தாக்கிய சம்பவம் நடக்கவில்லையா? உசிலம்பட்டியில், திண்டுக்கல்லில் நேருக்குநேர் கல்லை எறியவில்லையா? கோடம்பாக்கத்தில் ரகளை நடக்கவில்லையா? இவைகளையெல்லாம் சந்தித்து வந்தவர்கள்தான் நாங்கள்.

இந்த விளையாட்டுக்களை தான் புரட்சித்தலைவரிடம் விளையாடுகிறீர்கள் நீங்கள் தோற்பது உறுதி.

அவர் நிஜம் நாங்களெல்லாம் நிழல்.

இன்றைக்குமக்களைதிசை திருப்பும் முயற்சியில்குழப்பம் உண்டாக்க கருணாநிதி ஈடுபடுகிருர். அவரிடம்மக்கள் ஏமாறக் கூடாது.

குடிசை வாழ் மக்களுக்கு பிரச்சினைகள் ஏற்பட்டு உள்ளது. அதைச் சொல்லி இருக்கிறீர்கள் தண்ணீர் வசதி, சாலைசுகாதார வசதிகள் கேட்டிருக்கிறீர்கள். உங்கள் பிரச்சினைகளை எங்களால் தீர்க்க முடியும். தீர்ப்போம்.

தேர்தல் நேரத்தில் சொன்னேம். சொன்னவைகளை இன்று நிறைவேற்றி வருகிருேம்.

புரட்சித்தலைவர் உயிருக்கு குறிவைக்கிருர்களே. ஒரு போராட்டம் நடக்கிறது. ஏழைக்கும் பணக்காரனுக்கும் இடையே போராட்டம் நடக்கிறது.

நாடு முழுவதும் சிறு தொழில்கள் ஆரம்பிக்க வேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் எனக்கு ஆணை பிறப்பித்திருக்கிருர். நூற்றுக்கணக்கான தொழில்கள்பெருகி பல்லாயிரக்கணக்கானேருக்கு 5 வருடங்களில் வேலை வாய்ப்பை கொடுக்க வேண்டும் என்று முதல்வர் உத்தரவிட்டுள்ளார்.

இன்றையதினம் குடிசை மாற்று வாரிய குடியிருப்புக்கு வரவேண்டிய தொகை 83 லட்சமாக இருக்கிறது. இதற்கு யார் பொறுப்பு?

அதை வசூலிக்க நாங்கள் கட்டாயப் படுத்தினேமா? யார் காலத்தில் இந்த நிலை வந்தது.

76 வரை யார் யார் குடிசைமாற்று வாரிய குடியிருப்புகளை பெற்ருர்கள் என்பது எங்களுக்குத் தெரியும். விரைவில் அவர்களது முகமூடி கிழிக்கப்படும்.

வீடு வீடாக வருகிறோம். இரவு பகலாக விவரங்கள் சேகரிக்கப்படுகின்றன.

போராட்டம் நடத்தப் போகிறேன் என்று கருணாநிதி கூறிவருகிருர். அவர் ஏமாறப் போவது உறுதி.

அச்சுறுத்திக் கொண்டு அரசியல் நடத்துபவர் கருணாநிதி. 35 ஆண்டுகள் பழகிய எங்களுக்கு அவரை பற்றி தெரியும்.

ஆரம்பத்தில் அச்சுறுத்துவார். மிரட்டி மிரட்டி அரசியல் நடத்த எண்ணுவார். ஒரே ஒருவரிடம் தான் அவர் மிரட்டல் செல்லவில்லை. அவர்தான் முதல்வர்புரட்சித்தலைவர்.

புரட்சித்தலைவர் ஒழுக்கப் புரட்சியை தொடங்கிய 1972 அக்டோபர்மாதமே கருணாநிதியின் வீழ்ச்சி துவங்கிவிட்டது.

புரட்சித்தலைவர் அரசின் செயல்களுக்கு உள்நோக்கம் கற்பிக்க தயாராக இருப்பவர் கருணாநிதி மக்கள் அவரிடம் ஏமாறக் கூடாது.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. கூறினர்.

## அண்ணாமலை நூற்றுண்டு விழா அமைச்சர் ஆர். எம். வீ. பேசுகிருர்

சென்னை, செப். 29- ராஜா அண்ணாமலை செட்டியார் நூற்றுண்டுவிழாவின் 2-ம் நாள் நிகழ்ச்சி சென்னை அண்ணாசாலை சபையர் தியேட்டர் அருகிலுள்ள ராணி சீதை மன்றத்தில் இன்று (29ந்தேதி) மாலை 5 மணிக்கு நடக்கிறது.

டாக்டர் எம். ஏ. எம். ராமசாமி வரவேற்றுப் பேசுவார். அமைச்சர் ஆர்.எம். வீ. தலைமை வகிப்பார். சிலம்புச் செல்வர் ம.பொ. சி. சிறப்பு மலர் வெளியிடுவார் கவியரசு கண்ணதாசன் மலரைப் பெற்றுக் கொள்வார் வ. சுப. மாணிக்கம்நா.மகாலிங்கம் மீ. ப. சோமசுந்தரம், கம்பன்அடிப்பொடி ஆகியோர் பேசுவார்கள். சீர்காழி கோவிந்தராஜனின் இன்னிசை நிகழ்ச்சி நடைபெறும்.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications, 275, Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at Print House, 1, First Main Road, United India Colony, Madras-24. Editor: E. PARASURAMAN.

அண்ணா



### பின்தங்கிய பகுதிகளில்

# பெரிய தொழில்களைத் துவக்க தீவிரம்: முதல்வர் அறிவிப்பு

**ஓசூர், செப். 29- தமிழகத்தின் பின்தங்கிய பகுதிகள் அனைத்திலும் பெரும் தொழில்களைத்துவக்கி ஏராளமானோருக்கு வேலைவாய்ப்பளிக்க கழக அரசு தீவிரமாகச் செயல்பட்டு வருகிறது என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

தமிழகத்தில் பின்தங்கிய மாவட்டங்களில் ஒன்றான தர்மபுரி மாவட்டத்திலுள்ள ஓசூரில் அமைக்கப்பட்டுள்ள அசோக் லேலண்டு விரிவாக்க பகுதியை முதல்வர் புரட்சித் தலைவர் திறந்துவைத்தார்.

இந்த விழாவுக்கு தொழிலமைச்சர் எஸ். திருநாவுக்கரசு தலைமை வகித்தார். விழாவுக்கு பல்லாயிரக்கணக்கான மக்கள் வந்திருந்தனர்.

அசோக் லேலண்டு தலைவர் ஆர். கே. சகானி வரவேற்புரையாற்றினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் மின்விசையைஅழுத்தி திறந்து வைத்ததும் தொழிற்சாலையிலிருந்து புதிய சேசிஸ்கள் வெளியே வந்தன.

பிரிட்டிஷ்துணைஹைகமிஷனர்மார்ஷெல், லேலண்டு தலைவர் ஏபல் ஆகியோர் விழாவில் கலந்துகொண்டனர்.

ஏ. எம். எம். அருணாசலம் நன்றி கூறினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் தொழிற்சாலையைத் திறந்துவைத்துப் பேசியதாவது:-

## முன்னேற்றம் யார் கையில்?

உழைக்கும் வர்க்கத்தினரின் கைகளில் தமிழகத்தின் முன்னேற்றம், தொழிற்சாலைகளின் முன்னேற்றம், இந்தியாவின் முன்னேற்றம் இருக்கிறது.

அந்த வகையில் தொழிலாளர்கள் எச்சரிக்கையோடும், கவனத்தோடும் தொழிலில் ஈடுபட்டு அக்கறை காட்டவேண்டும்.

பணிகளை செய்து கொண்டிருப்பவர்கள் மேலும் திறமைசாலிகளாக தங்களை மாற்றிக் கொள்ளச் செய்ய வேண்டும்.

தமிழக அரசைப்பொறுத்தவரை தொழில்களை துவக்க விரிவாக்க வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து தர முன் வந்திருக்கிறது என்பதை அமைச்சர் திருநாவுக்கரசு எடுத்துக் கூறினார்.

சிப்காட் நிறுவனத்தின் மூலம் தமிழகஅரசுதொழில் பெருக்கத்திற்கு வளர்ச்சிக்கு வேண்டியவைகளைச் செய்து வருகிறது.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக அரசு ஏற்பட்ட பின்பு தொழில்கள் எப்படி வளர்ந்து வருகின்றன என்பதை நன்கு அறிவீர்கள்.

இந்த தொழிற்சாலைக்கு (லேலண்டு) 100 ஏக்கர் மேம்படுத்தப்பட்ட நிலத்தை குறைந்த விலைக்கு ஏக்கர் 12500 ரூபாய் வீதம் கொடுத்திருக்கிறோம். இதன்மூலம் பல்லாயிரம்பேருக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும் நிலை ஏற்படும்.

## ஏகபோகம் கூடாது

லேலண்டு நிறுவனத்தினர் என்னை வந்து சந்தித்தபோது பின்தங்கிய மாவட்ட பகுதிகளில் தொழிற்சாலையை துவக்குங்கள் என்று சொன்னேன்.

பின்தங்கிய பகுதிகளில் தொழில்கள் வளரவேண்டும். ஏகபோகம் வளர கூடாது. சாதாரண மக்கள் உழைக்கும் மக்கள் வளர வேண்டும்.

ஏழை மக்களின் வாழ்க்கை வளர திட்டமிட்டு பின் தங்கிய பகுதிகளில் தொழில்கள் வளர வேண்டும். பின்தங்கிய மாவட்டங்கள் வளர்ந்து கோவை போன்ற மாவட்டங்களாக வேண்டும். அதற்கு வேண்டிய வசதிகளை செய்து தருவோம்.

அதற்காக வரிச்சலுகை கொடுக்கிறோம். பிறகு அவர்கள் அரசுக்கு செலுத்தவேண்டியவரிவட்டி செலுத்தும்அளவுக்குவளர வேண்டும்.

எந்த ஒரு தொழிற்சாலையிலும் தொழிலாளர்களின் ஒத்துழைப்பு இல்லாமல் லாபம் எதிர் பார்க்க முடியாது வளர முடியாது.

அந்த வகையில் தொழிலாளர்களின் ஒத்துழைப்பு இருக்க வேண்டும்.

2800 பேருக்கு வேலை வாய்ப்பளித்திருக்கிறார்கள் இந்த தொழிற்சாலையின் முதலீடு 100 கோடிரூபாய் அளவுக்கு உயரும் என்றார்கள்.

லாபம் கிடைக்கும் என்ற நம்பிக்கை வந்தால்தான் பங்கு மூலதனம் போட முன்வருவார்கள்.

## பூரிக்கும் உள்ளம்

மூன்று நான்கு ஆண்டுகளில் 70 ஆயிரம் பேருக்கு வேலை கிடைக்கும் என்று சொன்னதை கேட்டபோது என் உள்ளத்தில் ஏற்படும் பூரிப்பை சொல்ல வார்த்தைகளே கிடையாது. அந்தஅளவுக்கு மகிழ்ச்சி அடைகிறேன்.

70 ஆயிரம் பேர்என்றால் 70 ஆயிரம் குடும்பம்-3லட்சத்து 50 ஆயிரம் பேர்களுக்கும் வாழ்வு கிடைக்கிறது. இதை மறந்து விட முடியாது.

இந்த தொழிற்சாலையையொட்டி1500சிறுதொழில்கள் ஏற்பட்டிருப்பதாகச் சொன்னார்கள்.

இப்படிப்பட்ட தொழில்கள் கிராமப்புறங்களில் துவங்க திட்டமிட்டு வருகிறோம்.

50 கோடி ரூபாயில் 50 தொழில்களைத்துவக்கலாம் ஒவ்வொரு தொழிலிலும் ஆயிரம் இரண்டாயிரம் பேருக்கு வேலைகிடைக்கும்.

பெரிய தொழில்களும் துவங்கும் அதே சமயத்தில் சிறு தொழில்களும் துவங்க வேண்டும் என்பதில் அரசு அக்கறை காட்டிவருகிறது.

## கெட்ட பழக்கம் வேண்டாம்

அன்னிய செலாவணியை ஈட்டுவதற்கு இப்படிப்பட்ட தொழில்கள் துவங்கப்படவேண்டும்

அத்தியாவசியமான தேவையை பூர்த்தி செய்ய கிராமங்களில் சிறுதொழில்கள் ஏற்பட வேண்டும். பெரிய தொழில் சிறு தொழில் இரண்டு தொழில்களிலும் கவனம் செலுத்தி வருகிறோம்.

இதற்கு பொதுமக்களும் தொழிலாளர்களும் ஒத்துழைப்புத் தர வேண்டும்.

மக்கள் சிந்திக்கவேண்டும். தேவையற்ற கெட்ட பழக்கம் இருந்தால் விட்டு விட வேண்டும்.

உடலைக் கெடுத்து, சக்தியை இழக்கச் செய்து, சிந்திக்க வைக்கும் ஆற்றலை இழக்கும் மதுபோன்ற பழக்கமிருந்தால் விட்டு விடவேண்டும்.

இதைக் கேட்பது எனக்காக அல்ல. உங்களுக்காக, உங்கள் குழந்தைகளுக்காக உங்கள் சந்ததியினரின் எதிர்காலத்திற்காக செய்ய வேண்டும். அதைசெய்தால் மிகப்பெரிய தியாகம் செய்தவர் ஆவீர்கள்.

உழைத்துக் கிடைக்கும் பணத்தில் ஒரு பகுதியை சிக்கனப்படுத்த வேண்டும் சிக்கனப்படுத்தும் பணத்தில் கிராமப்புறங்களில் தொழில் துவங்க பங்காக போடலாம்.

10 பேர் 5 பேர் சேர்ந்து கிராமங்களில் தொழில் துவங்கலாம். அதன் மூலம் சொந்த தொழில் நடத்த முடியும். கை கட்டி வேலை செய்வதை விட தானே தொழில் செய்யமுடியும்.

தொழிலதிபர்கள்தொழிலாளர்களை தாயாக, தந்தையாக, அண்ணனாக மதிக்க வேண்டும். பழி வாங்குவதில் பெருமை கிடையாது.

பிரச்சினை ஏற்பட்டால் பேசி திருத்தி நண்பர்களாக ஆக்க வேண்டும்.

தொழிலாளி கண்ணீர் விட கலக்கமடைய முயற்சிக்கக்கூடாது.

வேலை நிறுத்தம், கதவடைப்பு போன்ற நிலைமைகளுக்கு இடம் தரக்கூடாது.

இந்த தொழிற்சாலை வெற்றி பெற என்னுடைய கைராசி என்றார்கள். என்னுடைய கைராசி அல்ல, மக்களுடைய கைராசி, தொழிலாளர்களுடைய கைராசி.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

## அமைச்சர் திருநாவுக்கரசு

விழாவுக்கு தலைமை வகித்து அமைச்சர் திருநாவுக்கரசு பேசும்போது கூறியதாவது:-

இந்த தொழிற்சாலையை துவங்குவதற்கு அரசு 100 ஏக்கர் நிலப்பரப்பை கொடுத்திருக்கிறது.

இவர்கள் பாதுகாப்புத்துறைக்கு தேவையான சேசிஸ்களை தயாரிக்கிறார்கள் 3அச்சு லாரியை தயாரிக்கிறார்கள். மேலும் இந்த தொழிற்சாலையை விரிவாக்க இருக்கிறார்கள்.

இந்த மாநிலத்தில் அமைய இருந்த பெரிய தொழிற்சாலையைமராட்டிய மாநிலத்திற்கு கொண்டு செல்வதா என்று எதிர் கட்சியினர் கூறினர்.

அதுபற்றி நான் இவர்களைக் கேட்டேன். அது வியாபார ரீதியில் கொண்டு சென்றிருப்பதாக அந்த நிறுவனத்தின் தலைவர் சொன்னார்.

தமிழக அரசைப்பொறுத்தவரை புரட்சித்தலைவர் பெரிய தொழிற்சாலை துவக்குவதில் ஆர்வம் காட்டி வருகிறார்.

புரட்சித்தலைவர் ஆட்சியில் தொழில்கள் வேகமாக வளர்ந்து வருகிறது.

பின்தங்கிய மாவட்டங்களில் தொழில்களைத் துவக்க மத்திய அரசின் உதவியை பெறுவதில் தமிழகம் முதலிடம் வகிக்கிறது. 10 கோடி ரூபாயை மத்திய அரசிடமிருந்து பெற்றிருக்கிறது.

ஓசூர், ராணிப்பேட்டையில் தொழில்பேட்டைகளைத் துவக்கியிருக்கிறோம் ஒவ்வொரு மாவட்டத்திலும் தொழில்பேட்டை துவங்க இருக்கிறோம்.

புதுக்கோட்டையில் 350 ஏக்கர் நிலமும், மானாமதுரையில் 650 ஏக்கர் நிலமும் இதற்காக ஆர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது.

தூத்துக்குடியில் உப்பு சம்பந்தப்பட்ட தொழில் துவங்க 500 ஏக்கர் நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது.

கடலூரில் கெமிகல்ஸ் சம்பந்தப்பட்ட தொழில் துவங்க அரசு நடவடிக்கை எடுத்துவருகிறது.

தமிழகத்தை பொறுத்தவரை பின் தங்கிய பகுதிகளில் தொழில்கள் துவங்க வட்டியில்லாமல் கடனாக கொடுக்கும் 15 லட்சம் ரூபாயை அதிகரிக்க அரசு ஆலோசனை செய்து வருகிறது.

## தாய் வீடு

விற்பனைவரி சலுகை 48 லட்சம் ரூபாய் என்பதை உயர்த்த அரசு ஆலோசித்து வருகிறது.

ஓசூரில் தொழிற்சாலைகள் துவங்க 1500 ஏக்கர் நிலம் ஒதுக்கியிருந்தோம்.

தொழில்கள் துவங்க தொழிலதிபர்கள் முன்வந்திருக்கிறார்கள். மேலும் 750 ஏக்கர் நிலத்தை ஒதுக்க அரசு முன்வந்துள்ளது.

வட மாநிலத்தில் விரிவாக்கம் நடந்தாலும் அசோக்லேலண்டின் தாய் வீடு எண்ணூர் தான்.

40ஆயிரம் சேசிஸ்களை தயாரிக்கும் திட்டத்தை தமிழகத்தில் கொண்டு வரவேண்டும் மற்றவை சகோதரத் தொழிற்சாலைகளாக நடத்தவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

## சகானி

அசோக் லேலண்டு தலைவர் சகானி பேசும்போது கூறியதாவது:

நாங்கள் சென்ற முறை முதல்வரை வந்து பார்த்தோம்.

பின் தங்கிய மாவட்டத்தில்விஸ்தரிப்புதிட்டத்தை துவக்க சொன்னார்.

12 ஆயிரம் சேசிஸ் தயாரிக்கிறோம். 40 ஆயிரம் சேசிஸ்சாகவிஸ்தரிக்கப்படும் இது முதல் கட்டம்தான். இப்போது 52 கோடி ரூபாயில் துவக்கியிருக்கும் தொழிற்சாலையில் 15 ஆயிரம் பேருக்கு வேலைகிடைக்கும்.

இந்த தொழிற்சாலையையொட்டி1500உபதொழில்கள் ஏற்பட்டுள்ளன.

இன்னும் இரண்டுமூன்று வருடத்தில் 100 கோடி ரூபாய் அளவுக்கு செலவிடப்படும். இத்தொழிற்சாலை முழுமை பெற்றால் 70 ஆயிரம் பேருக்கு வேலை கிடைக்கும். இவ்வாறு சகானி கூறினார்.

---

அமைச்சர்கள் பங்கேற்பு

## பட்டுக்கோட்டை வீரா திரையரங்கு திறப்புவிழா

பட்டுக்கோட்டை. செப்.29-பட்டுக்கோட்டையில் வீரா திரையரங்கு திறப்பு விழாவில் அமைச்சர்கள் கே. ஏ. கே. எஸ். டி. எஸ். ஆர். எம். வீ. ஆகியோர் கலந்துகொள்கின்றனர்.

வருகிற வெள்ளி காலை 9 மணிக்கு பட்டுக்கோட்டையில் வீரா திரையரங்கு திறப்புவிழா நடக்கிறது.

அமைச்சர் எஸ். டி. எஸ் விழாவைத் துவக்கி வைக்கிறார். அமைச்சர் கே. ஏ. கே. முன்னிலை வகித்து பரிசளிக்கிறார். அமைச்சர் ஆர்.எம்.வீ. படக்கருவியை முடுக்கி விடுகிறார். கலெக்டர் துரை சுந்தரேசன் குத்துவிளக்கு ஏற்றி வைப்பார். துரை. கோவிந்தராசன், குழ. செல்லையா, வீ, அழகிரிசாமி வி.என். சாமிநாதன் சி.வீரசாமி ஆகியோர் கலந்து கொள்வார்கள்.

---

தமிழ்நாடு அரசு
பொதுப்பணித்துறை

## ஒப்பந்தப் புள்ளி அறிக்கை

ஒப்பந்த நமூனா.....கே.2

தமிழக ஆளுநருக்காகவும் அவரது சார்பிலும் கீழே குறிப்பிட்டுள்ள வேலைக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப்புள்ளி எல்லா பதிவு செய்யப்பட்ட ஒப்பந்தக்காரர்களிடமிருந்தும் கண்காணிப்புப் பொறியாளர், பொ.ப.து. திருச்சி வட்டம், திருச்சி-620001 அவர்களால் 30-10-80 மாலை 3-00 மணி வரை பெற்றுக்கொள்ளப்படும்.

டெண்டர் பத்திரங்கள் இவ்வலுவலகத்தில் 20-10-80 முதல் 28-10-80 முடிய விற்பனைக்குக் கிடைக்கும். மற்ற விவரங்கள் திருச்சியில் உள்ள திருச்சி வட்ட கண்காணிப்பு பொறியாளர் அலுவலகத்தில் எல்லா வேலை நாட்களிலும் அலுவலக நேரத்தில் தெரிந்து கொள்ளலாம்.

வேலையின் பெயர்: திருச்சி மாவட்டம், திருச்சி தாலுகா, இனாம் குளத்தூர் கிராமம் குளத்தூர் பெரிய குளத்திற்கு தண்ணீர் கொண்டு வருவதற்கு அரியார் ஆற்றில் குறுக்கே ஒரு அணை கட்டுதல்.

பிணைத்தொகை: ரூ. 5150
ஒப்பந்தகாலம் : 15 மாதங்கள்.
டெண்டர் பத்திரத்தின் விலை : ரூ. 25-00 (ரூபாய் இருபத்தைந்து மட்டும்)
விற்பனை வரி : ரூ. 1-13 (ரூபாய் ஒன்றும் பைசா பதிமூன்றும் மட்டும்)

(ஒ.ம்) எஸ். ஆனந்தபாபு
பி.இ.,
கண்காணிப்பு பொறியாளர்,
(பொ.ப.து) திருச்சி வட்டம்
திருச்சிராப்பள்ளி-1.

DIPR: 29726/80-98

---

சென்னை பெருநகர் அபிவிருத்திக் குழுமம்

## அறிவிப்பு

சென்னை பெருநகர் வளர்ச்சிக்குழுமத்தால் சமர்ப்பிக்கப்பட்டு 1971ம் ஆண்டில் தமிழ்நாடு நகர் மற்றும் ஊரமைப்புச் சட்டத்தின் (தமிழ் நாட்டின் 1972ம் ஆண்டின் 35 வது சட்டம்) பகுதி 28ன் கீழ் தமிழ்நாடு ஆளுநரால் ஒப்புதல் அளிக்கப்பட்ட, கிண்டி (திட்டக்கோட்ட எண் 15, வட்ட எண்-1) பகுதிக்கான விரிவான வளர்ச்சித் திட்டத்தை மேற்படி சட்டத்தின் பகுதி 30-ல் அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்தின் கீழ் தமிழ்நாடு ஆளுநர் வெளியிடுகின்றார்.

அனைத்து உள்ளடக்கங்களுடன் கூடிய விரிவான வளர்ச்சித் திட்டத்தை பெரியார் மாளிகை, கதவுஎண் 52,ஈ.வி.கி. சம்பத் சாலை, சென்னை600007-ல் உள்ள சென்னை பெருநகர் வளர்ச்சிக்குழும அலுவலகத்தில் அலுவலகநேரங்களில் (காலை 10.00 மணி முதல் மாலை 4.30 மணி வரை) இலவசமாகப் பார்வையிடலாம்.

(ஆளுநர் ஆணைப்படி)
ப. கந்தசாமி,
ஆணையர் மற்றும் செயலாளர்

**சென்னையின் வளர்ச்சிக்கு சீரிய திட்ட மிடுவோர்.**

DIPR/42039/80-25/FDS

---

தமிழ்நாடு அரசு
பொதுப்பணித்துறை

## டெண்டர் அறிவிப்பு

எண். 18 SBC/ 80-81

தமிழ்நாடு ஆளுநருக்காகவும் அவரது சார்பிலும் பின்வரும் பணிகளுக்கான மூடி முத்திரையிட்ட டெண்டர்கள் மேற்பார்வை பொறியாளர், பொதுப்பணித் துறை, விசேட கட்டிடங்கள் வட்டம், சேப்பாக்கம், சென்னை-600 005 அவர்களின் அலுவலகத்தில் கீழ் குறிப்பிட்ட அந்தந்த தேதிகளில் பிற்பகல் 3 மணிவரை பெற்றுக்கொள்ளப்பட்டு அன்றே அவைகள் பிற்பகல் 3-15 மணிக்கு மேற்பார்வை பொறியாளர், விசேட கட்டிடங்கள் வட்டம், சென்னை அவர்களால் அவரது அலுவலத்தில் திறக்கப்படும்.

| வரிசை எண். (1) | வேலையின் பெயர் (2) | டேவணி தொகை டெபாசிட் 1%-ல் (3) | வேலையின் காலம் (4) | டெண்டர்கள் பெற்றுக் கொள்ள திறக்கும் தேதி (5) | டெண்டர் ஷெட்யூல்கள் கிடைக்கும் நாட்கள் (6) | டேவணித் தொகை டெபாசிட் மற்றும் டெண்டர் ஷெட்யூலின் விலையை செலுத்த வேண்டிய கணக்கின் தலைப்பு (7) |
|---|---|---|---|---|---|---|
| 1. | சென்னை, சேத்துபட்டு, T. B. ரிசர்ச் சென்டரில் உள்ள காரேஜ் பிளாக்குகளின் மேல் கான்டீன் பிளாக் கட்டுதல் | ரூ. 2,500 | நான்கு மாதங்கள் | 17-10-80 | 6-10-80 to 16-10.80 | செயற்பொறியாளர், பொ.ப.து. கட்டிடங்கள் பிரிவு எண். II சென்னை-5, |
| 2. | காஞ்சிபுரம் வருவாய்த் துறை பிரிவு அதிகாரிக்கு அலுவலக கட்டிடம் கட்டுதல். | ரூ. 5,000 | ஆறு மாதங்கள் | 23-10-80 | 13-10-80 to 22-10-80 | செயற்பொறியாளர், பொ.ப.து. கட்டிடங்கள் பிரிவு காஞ்சிபுரம். |
| 3. | சென்னை, அடையாறு அருகில் இந்திய அரசினுடைய 'இண்டர் ஸ்டேட் ஒயர்லெஸ் டிரான்ஸ் மிட்டிங் ஸ்டேஷனுக்கு கட்டிடங்கள் கட்டுதல். | ரூ. 1,500 | ஏழு மாதங்கள் | 25-10-80 | 14-10-80 to 24-10-80 | செயற் பொறியாளர், பொ.ப.து. கட்டிடங்கள் பிரிவு எண். I சென்னை-5. |
| 4. | சென்னை, எழும்பூரில் உள்ள அரசினர் அரும் பொருட்காட்சியக காம்பௌண்டில் குழந்தைகள் அரும்பொருட் காட்சியகம் பகுதி I கீழ்தளத்திற்கு மேல் கட்டுதல். | ரூ. 25,000 | ஒரு வருடம் மற்றும் இரண்டு மாதங்கள் | 4-11-80 | 23-10-80 to 3-11-80 | do |
| 5. | திருவொற்றியூரில் திருவொற்றியூர் முனிசிபாலிடிக்கு ஷாப்பிங்காம்பௌக்ஸ் கட்டுதல் (கீழ் தளத்திற்குமேல்) | ரூ. 5000 | ஐந்து மாதங்கள் | 11-11-80 | 28-10-80 to 10-11-80 | செயற் பொறியாளர், பொ.ப.து. கட்டிடங்கள் பிரிவு எண். IV சென்னை-5. |

டெண்டர் பத்திரங்கள் பதிவு பெறாத குத்தகைதாரர்களுக்கும் வழங்கப்படும். பதிவு பெறாத குத்தகைதாரர் தங்களின் திறமையின் மீது வேலையை பெறுவதில் வெற்றியடைந்தால் அவர்கள் தங்களிடம் வேலையை ஒப்படைக்கு முன் தங்களை பொதுப்பணித்துறையில் தகுந்த வகுப்பில் பதிவு செய்து கொள்ளவேண்டும்.

ஒவ்வொரு வேலைக்கும் வரைபடங்களுடன் கூடிய டெண்டர் பத்திரங்களின் விலை, விற்பனை வரி, உபரி வரி, உட்பட ரூ. 78-15 ஆகும். இவை எக்காரணத்தைக் கொண்டும் திருப்பித்தரப்பட மாட்டாது.

வேலையின் டெண்டர் பத்திரங்கள் மற்றும் இதர விவரங்களை மேற்பார்வை பொறியாளர், பொ. ப. து., விசேட கட்டிடங்கள் வட்டம், சென்னை அவர்களின் அலுவலகத்திலிருந்து மேற்கண்ட தேதிகளில் எல்லா வேலை நாட்களிலும் அலுவலக நேரத்தில் பெற்றுக் கொள்ளலாம். இனம் 2-க்கு டெண்டர் பத்திரங்களை காலம் 7-ல் குறிப்பிட்ட அந்தந்த செயற் பொறியாளர் அலுவலகத்திலிருந்தும் அலுவலக நேரத்தில் பெற்றுக் கொள்ளலாம்.

(ஒம்) ஜி. கஜபதி
மேற்பார்வை பொறியாளர், பொ. ப. து. விசேட கட்டிடங்கள் வட்டம்,
சென்னை-5

டிஐபிஆர்--29726/8097-S